

# கபீர்தாசரின்

# கவிமலர்கள்

சேலம் அன்பரசு

# கபீர்தாசரின் கவிமலர்கள்

தமிழ் வடிவம்
சேலம் அன்பரசு

விஜயம் பதிப்பகம்
30, சென்னகிருஷ்ணன் தெரு
சேலம்-636 002

## நூல் விவரம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | கபீர்தாசரின் கவிமலர்கள்<br>Poems of Kabeer Dhas (Tamil) |
| இந்தி மூலம் | : | ஞானி கபீர்தாசர் |
| தமிழ் வடிவம் | : | சேலம் அன்பரசு<br>B. Anbarasu, M.A.,M.Ed.,Dip.J., |
| மொழியாக்க உதவி | { | சி. சத்திய மூர்த்தி, எம்.ஏ.,பி.எட்., ப்ரவீண்<br>கு. சித்தராசு, எம்.ஏ.,பி.எட். ப்ரவீண<br>திருஞானசம்பந்தம், விஷாரத் |
| மேலட்டை | : | ஓவியர் மேகி |
| முதலாம் பதிப்பு | : | செப்டம்பர், 1988 |
| பதிப்புரிமை (தமிழ் வடிவம்) | : | நூலாசிரியருக்கு |
| தாள் | : | 10·9 K. G. White Printing |
| எழுத்து | : | 10 Point |
| நூல் அளவு | : | 19×13 cm |
| பக்கங்கள் | : | XXIV+120=144 |
| படிகள் | : | 1000 Copies |
| அச்சு | : | Kathiravan Achagam,<br>5-123 Angammal Nagar, Salem-9 |
| பைண்டு | : | Box Board |
| விலை | : | ரூ. 12—50 |
| வெளியீடு | : | விஜயம் பதிப்பகம்,<br>30, சென்னகிருஷ்ணன் தெரு,<br>சேலம்—636 002. |

## பதிப்புரை

சேலம் அன்பரசு அவர்கள் எழுதிய ''கபீர்தாசரின் கவிமலர்கள்'' என்னும் இந்நூலை வெளியிடுவதில் பெருமை யடைகிறோம். சமயப் பொதுமை உணர்வையும் அன்பு வழியையும் ஊட்டுபவை ஞானி கபீர்தாசரின் பாடல்கள். வாசகர்கள் இந்நூலை வரவேற்றுப் பேராதரவு அளிப்பார் கள் என்பதில் ஐயமில்லை.

—பதிப்பகத்தார்

# நுழைவாயில்

அண்ணல் காந்தியடிகளை மிகவும் கவர்ந்தவை ஞானி கபீர்தாசரின் பாடல்கள்,

கபீர்தாசரைப் பற்றிய கதைகளுக்கு நமது நாட்டில் பஞ்சமில்லை. அவருடைய பிறப்பைப் பற்றிய நம்ப இயலாத கதைகள் இந்த இருபதாம் நூற்றாண்டிற்குப் பொருந்துவன அல்ல. அவருடைய காலத்தைப்பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன.

'கபீர் பந்த்' என்ற கபீர் மரபினர் கபீர்தாசர் கி. பி. 1398 முதல் 1518 முடிய 120 ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கூறுகின்றனர். 1

கபீர் காலத்தில் வாழ்ந்து, அவருக்குப் பல கொடுமைகள் செய்தவனாகக் கூறப்படும் தில்லிபாதுஷா சிக்கந்தர் ஷாவின் காலம் கி. பி. 1488 முதல் 1512 முடிய ஆகும்.

என்சைக்ளோபீடியா பிரிட்டானிகாவோ, கபீரின் காலம் கி.பி. 1398 (?) முதல் 1518 முடிய என்று பிறந்த ஆண்டைக் கேள்விக் குறியோடுதான் தருகிறது' 2

தமிழக அரசு தயாரித்த கலைக்களஞ்சியமோ, கபீர் காலம் கி.பி 1440 முதல் 1518 என்று கூறுகிறது 3. எது எப்படியாயினும் கபீர் வாழ்ந்தது உண்மை.

இராமானுசருடைய விசிட்டாத்துவைதக் கொள்கையை அவருக்கு 400 ஆண்டுகளுக்குப் பிறகு வடநாட்டில் பரவச் செய்தவர் இராமானந்தர்.

''பக்தி இயக்கம் திராவிட நாடாகிய தமிழகத்தில் தோன்றியது. இராமானந்தரால் வட இந்தியாவுக்குக் கொண்டு செல்லப்பட்டது. கபீர் தாசர் அதனை ஏழ்கடல்களிலும், ஒன்பது கண்டங்களிலும் பரவச்செய்தார்''

என்று திரு குஸ்வந்த்சிங் தமது, சீக்கியர் வரலாறு என்னும் நூலில் கூறியுள்ளார் (Bakti was born in Dravida country - Tamil Nadu - brought to the north by Ramananda; Kabir spread it over the seven seas and nine continents) 4

கபீர்தாசர் தோன்றிய காலப் பின்னணி மிகவும் குழப்பம் வாய்ந்தது. அக்கால இந்திய மன்னர்களின் ஒற்றுமை இன்மையாலும், பொறாமைக் குணத்தாலும், பதவி வெறியாலும் இசுலாமியர் நமது நாட்டு மக்களை அன்று வெல்வது எளிதாயிற்று.

ஆனால், அந்நியர்களின் ஆதிக்கங்களும், ஊடுருவல்களும் இந்திய மக்களின் ஆணிவேராக விளங்கிய பண்பாட்டினை அழிக்க இயலவில்லை. தமது சமயக் கருத்துகளை இந்திய மண்ணில் வேரூன்றச் செய்வது இயலாது என்று அறிந்த இசுலாமியர்கள் சிலர், தம்மை சில கட்டுப்பாடுகளில் இருந்து தளர்த்திக்கொண்டு, பிற சமயங்களைப் பற்றிய கருத்துகளையும் தெரிந்துகொள்ள முற்பட்டனர். அதற்குப் பிறமொழி, பிறகாலச்சார அறிவு அவர்களுக்குத் தேவையாக இருந்தன. அவர்கள் தமது வாழ்க்கை முறையைச் சிறிது மாற்றிக்கொண்டு, இந்து, புத்த, கிறித்தவ, கிரேக்கச் சமயக் கருத்துகளையும் ஊன்றிக் கற்கலாயினர். இப்படிப் பட்டவர்களே 'சூபிக்கள்' (Sufis) எனப்பட்டனர். சூபிக்கள் அனைவருக்கும் ஒருமித்த கொள்கை இல்லை.

''வைதீக இசுலாமியர்கள் (orthodox Muslims) 'கடவுள் ஒன்று' என்னும் கொள்கையை நம்பினர். 'எத்திசைத் திரும்பினும் அத்திசை இறைமுகம்' என்பது குரான் வகுத்த வழியாகும். சூபிக்கள், இந்து பக்தர்களை நாடி வந்து, ஆடிப்பாடி இறைவனை வழிபடுவதை விரும்பினார்கள். இசுலாமியர்கள் தமது சமயத்தை நம்பாதவர்களையும், அவர்களின் வழிபாட்டுத் தலங்களை நாசமாக்கிய காலத்திலும், சூபிக்கள் இந்துக்களைத் தமது இல்லங்களுக்கு அழைத்துச் சென்று, உடன் பிறப்பென்னும் நினைவோடு தழுவிக்கொண்டனர். தமது சமயத்தில் அதிகப்படி

யான நபர்கள் சேரவேண்டு மென்பது மட்டும் சூபிக்களின் கொள்கை அல்ல'' என்று திரு. குஸ்வந்த்சிங் தமது 'சீக்கியர் வரலாறு' என்னும் நூலில் கூறியுள்ளார், 5

கபீர், இந்தியில் 'ஆதிகவி' என்று அழைக்கப் படுகிறார். அவருடைய கவிதைகள் பெயர் பெற்றதற்குக் காரணம் அவருடைய பண்டித நடை இல்லாத மொழியே ஆகும்.

''கபீர் ஒரு கவிஞராக இருந்ததைப் போலவே ஓர் இசைவாணராகவும் இருந்துள்ளார். கூடாரங்கள் செய்யும் தொழிலை மேற்கொண்ட பால் (Paul), செருப்புத் தொழி லாளியாகிய போமே (Boehme), பாத்திரங்கள் செப்பனிடும் தொழிலாளியாகிய பண்யன் (Bunyan), நாடாத் தொழி லாளி (ribbon maker) யாகிய தெர்ஸ்டீஜன் (Tersteegen) ஆகியவர்களைப் போலவே, கபீர் தமது நெசவுத் தொழி லைச் செய்து கொண்டே கவிதைகளை இயற்றவும் தெரிந் திருந்தார்'' என்று கபீர் வாழ்க்கை வரலாற்றை எழுதிய 'எவலின் அண்டர்ஹில்' (Evelin Under Hill) என்பவர் குறிப்பிடுகிறார். 6

நீரு, நீமா ஆகிய இசுலாமியத் தம்பதியரின் வளர்ப்புக் குழந்தைதான் கபீர் என்று தெரிந்திருந்தும், இராமானந்தர் அவரைச் சீடராக ஏற்றுக்கொண்டதற்குக் காரணம் கபீரின் சிறந்த நடவடிக்கைகளாகத் தான் இருக்க முடியும் வைணவ ஆச்சாரியாரான இராமானந்தர் கபீருக்கு எவ்வாறு தீட்சை வழங்கலாம் என்ற கருத்து வேறுபாடும் அக்காலத்தில் கிளம்பி இருக்க வேண்டும்.

கபீர், தாம் உணர்ந்த இறைவனுக்கு 'இராம்' என்று பெயரிட்டார். அதனால் இசுலாமியர் அவரை வெறுத் தனர். தாம் வழிபடும் இராமன் இந்துக்கள் வழிபடும் இராமன் அல்லன் என்று கபீர் கூறியதால் இந்துக்களும் அவரை வெறுத்தனர். வைணவக் கோலத்துடன் கபீர் காணப்பட்ட காரணத்தினால் அவரை வைதீகர்களும் வெறுத்தனர்.

# IV

இராமானந்தர் இராமானுசரைத் தழுவிய வைணவ ராக இருந்ததால் கபீரும் அவ்வழியினராகத்தான் இருந்திருக்க வேண்டும்.

"இறைவனின் வடிவம் அண்டம் முழுவதும் நிரம்பிய விசுவரூப தரிசனமாக பகவத்கீதையில் காட்டப்படுகிறது. 'ஒப்புயர்வற்ற ஆன்மாவின்' (Suprim Spirit) ஒரு சிதறலே மனித ஆன்மா. ஒவ்வொரு மனித ஆன்மாவும் ஒப்புயர் வற்ற ஆன்மாவுடன் இணைந்து, அதனுடன் ஒன்றிக் கலத்தல் வேண்டும். இது அன்பினாலும், பக்தியினாலும், இறைவனின் பெயரை இடைவிடாது உரைப்பதனாலும் இயலும். இராமானுசரின் இக்கொள்கை 'விசிட்டாத்து வைதம்' என்று அழைக்கப்படுகிறது" என்று திரு. கே.ஜி ஒர்த்தி தமது, ஸ்ரீ இராமனில் இருந்து ஸ்ரீ இராமகிருஷ்ணர் வரை என்னும் நூலில் கூறியுள்ளார். 7

மேற்காணும் கருத்தமைந்த கபீர் பாடல்கள் பல காணப்படுகின்றன. "ஆண்டவன் தன்னைக் காட்டுதல் பொருட்டு ......... மேலோன் தரிசனம் கண்டது தானே" என்னும் பாடலில் இராமானுசரின் கொள்கை பொதிந்து கிடப்பதைக் காணலாம்.

'ஏடும் எழுது கோலும் தொடாத
காசியில் வாழும் ஏழை நெசவாளி' என்று தம்மைக் கூறிக்கொள்ளும் கபீர், வேதங்கள், சாத்திரங்கள், குரான் ஆகியவற்றின் உள்பொருளை அறிந்தவராகவே காணப் படுகிறார்.

வேத, சாத்திரங்களையும், குரானையும் கபீர் வெறுப்பது போல நமக்குத் தோன்றலாம்; ஆனால் அது உண்மை அல்ல. அவை அவருடைய காலக்கட்டத்தில் பண்டிதர்கள், முல்லாக்கள் ஆகியவற்றின் கைகளில் சிறைப் பட்டிருந்தன. அவர்கள் தரும் வியாக்கியானங்களே அன்று முடிவாக இருந்தன. அப்போது வாழ்ந்த மன்னர்கள் பெரும்பாலோர் அவர்களின் கைப்பாவைகளாக இருந்தனர்.

## V

கபீரின் கவலையெல்லாம் வேத சாத்திரங்களையும், குரானையும் கற்றவர்கள் அவை கூறும் வழியில் நடக்க வில்லையே என்பதுதான். தீர்த்த யாத்திரைகளை அவர் வெறுத்ததின் உண்மைக் காரணம் மக்களால் அவற்றின் பயன் உணரப்பட வில்லையே என்பது தான். இதன் காரணமாகத்தான் இவற்றையெல்லாம் கபீர் சாட வேண்டிய இன்றியமையாத நிலை ஏற்பட்டது. வேத பாராயணம் செய்பவர்களைப் பார்த்து,

''வேத புராணப் பாரா யணங்கள்
போற்றிக் காப்ப தெல்லாம்
காது வளர்ந்த கழுதை சுமக்கும்
சந்தனப் பொதியாமே'' என்றும்,

''நானும் மறந்து இருந்த போதினில்
எந்தன் குருவும் வழியைக் காட்ட
சரியை, கிரியைகளை நான்துறந் தேனே
தீர்த்தம் தன்னில் மூழ்குதல் விட்டேன்''
என்றும் கூறுகிறார்.

அப்படியானால் இறைவனை (முழுமுதல் பொருளை) கபீர் எவ்வாறு அடையாளம் காட்டுகிறார் என்று பார்ப்போம்.

''படைப்போர் இல்லாப் பரம்பொருள்''

''நுண்ணுயிர் இருப்பது பிரம்மத்தின் உள்ளே
பிரம்மம் இருப்பதோ நுண்ணுயிர் உள்ளே
..................................................
பிரம்மம், உயிரினம் இரண்டிலும் அவனே
சுயமாம் மனதுடன் திகழு கின்றவன்''

''ஓமில் இருந்தே அனைத்துப் பொருள்களும்
தோன்றின; அவன் உடலும்
அன்பின் வடிவம் ஆகிடும் ஐயா
நிறம், உரு அழிவு இல்லான்''

# VI

பிரம்மம் வேறாகவும், படைப்புகள் வேறாகவும் நமக்குத் தோன்றினாலும் இரண்டும் ஒன்றே என்பது கபீர் கொள்கை. அவருடைய பாடல்களில் இக்கருத்து பரந்து கிடக்கிறது.

''அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே'' 8

என்னும் திருமூலருடைய பாடலை கபீர் கவிதைகளோடு ஒப்பு நோக்கி மகிழத்தக்கது. மேலும்—

கவிஞர்களுடைய மொழிகள் பலவாக வேறுபட்டு இருப்பினும், தாம் கண்ட உண்மைகளை அவர்களால் எவ்வாறு ஒன்றுபோல் சொல்ல முடிகிறது என்பது வியப்பூட்டுவதாக உள்ளது. கபீர் கவிதைகளில் அவற்றை விரிவாகக் காணலாம்.

கபீரின் அபூர்வ சக்தியைக் கண்டு வியந்தோர் கோரக் நாதர், ஸர்வானந்தர் முதலியோர் என்று செவிவழிச் செய்திகளில் இருந்தும், கபீர் கவிதைகளில் இருந்தும் தெரிகின்றது.

'அன்பும், தீய செயல்களைச் செய்வதற்கு நாணம் அடைதலும், தம்மினும் எளியோர்மேல் இரக்கமும், உண்மை பேசுதலும் ஆகிய ஐந்து குணங்கள் சான்றாண்மை என்னும் கட்டடத்தின் ஐந்து தூண்கள் ஆகும்' என்று ஐந்து குணங்களையும் ஐந்து தூண்களாகத் திருவள்ளுவர் கூறுவதுபோல 9, பக்தனுடைவ இல்லம் நான்குதூண்களால் ஆக்கப் படுகின்றது என்பது தொன்று தொட்டு இருந்துவரும் நம்பிக்கை. அந் நான்கு தூண்களாவன:

பக்தி — வழிபாடு
பக்தன் — வழிபாடுவோன்
பகவந்தன் — இறைவன்
குரு — ஆசான்

இதன் காரணமாகவே கபீர் கடைசிவரை, தமது குருவான இராமானந்தரின் பெயரையும் விடாமல் இருந்தார்.

கு (Gu) = அறியாமை; ரு (ru) = ஒளி. ஒருவருடைய அறியாமையை நீக்கி, அவரிடம் ஒளியினை ஊட்டி, இறைவனை அடையும் வழியினைக் காட்டுபவர் எவரோ அவரே 'குரு' ஆவார். உண்மைக்குரு எத்தன்மை உடையவர் என்பதைக் கபீர் கவிதைகள் நமக்குக் காட்டுகின்றன.

'உண்மை அன்பினைக் கோப்பையில் நிரப்பித்
தானும் உண்டு எனக்கும் தந்த
உண்மைக் குரு'

'கண்ணில் இருக்கும் திரையை அகற்றிப்
பிரம்ம தரிசனம் காட்டினான் அவனே'

அறிவு ஒன்றினால் மட்டும் இறைவனை உணர முடியாது என்பது கபீர் கொள்கை. இதனைத் தமது கவிதையில்,

'அறிவினால் அதனை உணர்ந்திட நம்பும்
அனைவரும் கண்ணிலாக் காபோதிகள் ஆவார்'

என்று குறிப்பிடுகிறார். அப்படியானால் இறைவனைக் காணும் வழிதான் யாது என்பதற்குக் கபீர் கூறும் வழி 'எளியபக்தி' (சகஜ யோகம்) என்பதுதான்.

"எளிய பக்தியே சிறந்தது ஐயா
.......................................
கண்களும், காதுகளும்
மூடவும் இல்லை; உடலை வருத்த வில்லை
புன்சிரிப் புடனே
கண்களைத் திறந்து பார்க்கிறேன் எங்கும்
'அவனது' அழகினையே" என்கிறார் கபீர்.

இவைபோன்ற பல கருத்துகள் கபீர் கவிதைகளில் ஆங்காங்கே நிறைந்துள்ளதைக் காணலாம்.

# VIII

இறைவனை வழிபட்ட பெரியோர், தமக்கும் இறைவனுக்கும் பல உறவு முறைகளைக் கற்பித்துக் கொண்டு பாடி வழிபட்டுள்ளனர்.10 தலைவன் - தலைவி என்னும் முறையில் பாடியோர் பலர். இம்முறையை 'நாயகன் நாயகி பாவம்' என்று குறிப்பிடுவார்கள். நாராயணன் தான் ஆண்மகன் (புருஷர்), மற்ற அனைவரும் பெண் தன்மை உடையவர் என்பது வைணவ சமயக்கருத்து. கபீர் தம்மைத் தலைமகளாகவும், இறைவனைத் தலைமகனாகவும் கருதிப்பாடிய பாடல்கள் பல காணப்படுகின்றன.

கபீர் தாசரை அவருடைய காலத்தில் தூற்றியவர் பலர் இருந்திருப்பினும், போற்றியவர்களும் இருந்திருப்பார்கள் அல்லவா? அவர்கள், 'கபீர் தாசர் இறைவனின் உண்மையான பக்தர்' என்று கூறிய போது, கபீரின் உள்ளம் நாணம் கொண்டதாம். காரணம், கபீரின் இதயம் இறைவனின் இதயத்தை அதுவரை தொடாமையே என்று அவருடைய மனம் நினைக்கிறது. இதனையே தலைவனை நினைத்துத் தலைவி கூறுவதாகக் கீழ்க்காணும் வரிகளில் பாடுகிறார்.

'நான்தான் உந்தன் மணமகள் என்று
நானில மக்கள் சொல்லும் போது
நாணம் கொள்கிறேன்; எந்தன் இதயம்
உன்இத யத்தைத் தொடவும் இல்லை'

மற்றொரு பாடலில், 'இறைவனைத் தான் அடையும் காலம் நெருங்கி வந்து விட்டதாகவும், ஆனால் அவனுடைய இருப்பிடத்திற்கு வழிகாட்டுவோர் யார்?' என்றும் கேட்கும் முறையில்

'வசந்த காலம் அருகில் வருகுது
எந்தன் அன்பன் தன்னிடம் என்னை
இணைத்து வைப்பவர் யாரே ஐயா?' என்கிறார்.

## IX

இதனையே படர்க்கை முறையில், கபீர் ஒரு பெண்ணைப் பார்த்துக் கூறுவது போல அமைந்த பாடல்களும் காணப்படுகின்றன. தலைவன் தலைவியின் இல்லம் தேடி வந்திருந்த இரவு நேரம் அவள் பாராமுகமாக இருந்து விடுகிறாள், இரவு நேரமோ வீணாகக் கழிந்து விடப் பொழுது விடிந்ததும் தலைவன், தலைவியின் இல்லத்தில் இருந்து வெளியேறி விட்டதாகப் பொருள் அமைந்த பாடல் ஒன்று;

'தூங்கி வழியாதே பெண்ணே
கண்விழித் திடுவாயே
.........................................
காதலன் கண்ணியவான்—நீயோ
அறிவிலிதான் பெண்ணே
காதலன் வருகையிலே—படுக்கை
விரித்திட மறந்தாயே'

இது போன்ற பாடல்கள் முழுவதும் படித்து இன்புறத் தக்கவையாகும்.

ஆசைகளை விட்டு, இல்லம் நீங்கிக் கானகம் செல்லு வதால் மட்டும் இறைவனை அடைய இயலாது என்பது சான்றோர் முடிவு. 'போய் அங்கு பெறுவது எவன்?' என்றே கேட்கிறார் திருவள்ளுவர். துறவறம் பூண்டு, உடலை வருத்திக்கொண்டு, நோன்புகளை மேற்கொள்வது வீண் என்பது கபீருக்கும் உடன்பாடு.

'மனதை அன்புச் சாயம் தன்னில்
தோய்ப்பதற்குப் பதிலாய்
யோகி என்பவன் தனது உடைகளைச்
சாயம் தோய்க்கின்றான்'

என்று போலித் துறவிகளைச் சாடுகிறார் கபீர். 11

நிலையாமை பற்றிய கருத்துகள் உலகக் கவிஞர்கள் அனைவரின் மனதிலிருந்தும் வெளிப்பட்டுள்ளன. 'இந்த உலகின் பெருமை யாது?' என்னும் வினா எழுப்பிக் கொண்டு, அவ்வினாவிற்கு விடையாக, 'நேற்றிருந்தவன் இன்று இல்லை என்பதே இவ்வுலகின் பெருமையாகும்' (நிலையாமை: 336) என்கிறார் திருவள்ளுவர். இப்படிப் பட்ட கருத்தமைந்த பாடல்களின் கருத்துகள் கபீர் படைப் பிலும் காணப்படுகின்றன.

'அவரவர் செய்யும் தொழில்கள் வேறுபட்டிருப்பினும் பிறப்பினால் அனைத்து உயிர்களும் சமம்' என்பது வள் ளுவர் கருத்து. 12 கபீர்தாசர் கூறுகிறார்:

'தாயின் கருவில் பிறந்திடு வோர்க்குச்
சாதியும், மரபும் இல்லை ஐயா
செய்வீகச் சாரம் தன்னில் இருந்து
படைக்கப் பட்டார் மனிதர் அனைவரும்'

இவைபோன்ற பல கருத்துகள் கபீர் பாடல்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன.

தொழிலைச் சார்ந்து பிரிந்திருந்த மக்கள் பிரிவு பிற் காலத்தில் சாதிகளாகக் கிளைத்தன. சமயங்களோ, இறைவனை அடையும் வழியைத் தனித்தனியே கூறும் நெறிகளாக இருந்து, பிற்காலத்தில் சமுதாயத்தில் பெரும் பூசல்கள் உண்டாவதற்குக் காரணமாய் ஆகிவிட்டன. சம யங்களில் தவறில்லை. அவற்றைக் கைக்கொண்டோர் சமய வெறி பிடித்தோராக ஆனதினால் வந்த விளைவே காரணம்

சமய ஆச்சாரியார்களின் கையில் சிக்கிய சில மன்னர் கள் தமக்கு மாறான சமய நெறியைப் பின்பற்றியவர்க்குக் கழுமரங்களையும், சுண்ணாம்புக் காளவாய்களையும் புகலிடங்களாக அளித்துக் களித்தனர். ஆகவேதான் பிற் காலத்தில் வந்த இராமலிங்கர், 'மதமென்னும் பேய் பிடியாதிருக்க வேண்டும்' என்றார்.

# XI

கபீர் தாசர் மட்டும் இவ்விதத் தண்டனைகளுக்கு விதி விலக்கா என்ன?

தில்லிபாதுஷா சிக்கந்தர்ஷா ஒருகால் (தமது வயிற்று வலியைப் போக்கிக்கொள்ள) இராமானந்தரையும், கபீரையும் காணக் காசிக்கு வந்திருந்தார். இதனைக் கண்ட சிக்கந்தர் ஷாவின் மத குரு ஷேக்தகி பொறாமை கொண்டார். காசி நகரத்து வைதீகர்களும், முல்லாக்களும் சேர்ந்து கொண்டு தில்லிபாதுஷாவிடம் சென்று கபீரைப் பற்றிக் குறை கூறினார்கள்.

கபீரைக் கொல்லும்படி அரசகட்டளை பிறந்தது. ஐம்பத்திரண்டு முறை கபீர் மரணம் வேண்டிச்சோதிக்கப் பட்டதாக மரபுக் கதைகள் கூறுகின்றன. கபீருக்கு இழைக்கப்பட்ட சில சோதனைகளை அவர் கவிதைகளில் இருந்து அறிய முடிகிறது. இவ்வகைக் கவிதைகளை இடைச் செருகல்கள் என்று கூறுவோரும் உண்டு.

காசிக்கு அண்மையில் உள்ள 'மக்கர்' என்னும் ஊரில் இறப்பவர்களுக்கு மோட்சம் இல்லை என்றும், மறு பிறவியில் கழுதையாய்ப் பிறப்பார்கள் என்றும் சிவபெரு மான் சாமிட்டார் என்பது இந்துக்களின் நம்பிக்கையாக இருந்து வந்தது. இம் மூட நம்பிக்கையைப் போக்கத் தமது இறுதிக் காலத்தை மக்கரில் கழிக்கத் திட்டமிட்டார் கபீர். அவருடைய விசாலமான உள்ளத்தை,

> ''கபீரன் உயிர்விடக் காசிக்குப் போனால்
> இராமன் அங்கே வந்திடு வானோ?
> ..................................................
> இதயம் இராமனில் இருந்திடு மானால்
> காசியும் மக்கரும் ஒரிடம் அன்றோ?''

என்னும் அவருடைய பாடல் வரிகளால் அறியலாம்.

# XII

கவிஞன் தான் கூறப்போகும் ஒரு பொருளை விளக்கு வதற்காக, உவமைகளைக் கூறும் வழக்கம் எல்லாக் காலங் களிலும், எல்லா மொழிக் கவிஞர்களிடையிலும் இருந்து வரும் வழக்கமாகும். கபீருடைய சில உவமை நயங்களைக் காண்போம்.

உடலை நிலமாகவும், ஆன்மாவை நிலத்தைக்காக்கும் வீரனாகவும், துன்பம், கோபம், கர்வம், சபலங்கள் ஆகிய குணங்களைப் பகைவர்களாகவும், போர் செய்ய உதவும் வாளை 'அறி' என்னும் பெயராகவும், போரினைப் புறக் கணிப்பவனைப் பேடியாகவும் தம் பாடல் ஒன்றில் உருவகம் செய்கிறார் கபீர். மேற்கூறப்பட்ட தீய குணங்களை 'அறி' என்னும் வாளினால் வெட்டி வீழ்த்திய பிறகு, உடலாகிய இந்நிலத்தில் வாய்மை, தூய்மை, மனநிறைவு ஆகியவை நிறைந்த ஆட்சியே நடக்கும்; ஆனால் இந் நோன்பு என்னும் போர் வேறு எவற்றை விடவும் அரிது என்பதை,

'வீரர் வாகையோ சிலமணி
விதவை நோன்பு அவள் சாம்வரை
உண்மை தேடுவோர் வாழ்வினில்
போரும் ஓய்தல் இல்லையே' என்கிறார் கபீர்.

'நமது உடல் ஒரு வீணை. இந்த வீணையில் நரம்பு களைக் கட்டியவன் 'அவனே'. நரம்பினை இசைத்து மீட்டு பவன் அவன். இவ்வீணையில் இருந்து எழும் இசையோ பிரம்மம். சிலகாலம் கழிந்த பிறகு, இவ்வீணையிலுள்ள நரம்புகள் அறுந்து விடுகின்றன. சாவிகள் ஒடிந்து பாழாகி விடுகின்றன. அதன் பிறகு வீணையால் பயன் என்ன? ஆகவே, மண்ணால் ஆகிய வீணை மண்ணில் வீழ்ந்து மண் ணாகும்' என்னும் கருத்தமைந்த பாடல் படித்து மகிழத் தக்கதாகும்.

'துறவற முறையால் பேரின்பம் காண
ஓயாது உரைக்கும் மனிதர்' எப்படிப்பட்டவர் என் பதற்குக் கபீர் கூறும் உவமை இன்றைய முற்போக்குக் கருத்துடையோரும் படித்து வியக்கும்படி உள்ளது.

# XIII

இறந்த கணவனின் ஈமத்தீயில் அவனது மனைவி விழுந்து இறந்தால் அவளும் அவனுடன் இணைவாள் என்னும் கருத்து தொன்று தொட்டுவரும் நம்பிக்கையாக இருந்தது. இதனைச் சாடியே, துறவறத்தால் பேரின்பம் காணலாம் என்று கூறும் மனிதருக்கு, கணவரது ஈமத்தீயில் விழச்சொல்லிக் கைம்பெண்டிர்களை வற்புறுத்திக் கூறும் மனிதரை உவமையாக்கிக் கூறுகிறார் கபீர்.

கபீர்தாசரின் கவிதைகளில் ஆங்காங்கே அறிவியல் தொடர்பான செய்திகளும் காணப்படுகின்றன.

'மரப்பந் துகள்எனக் காணும் உலகுகள்'
'ஆன்மா வாழும் அற்புத உலகம்
ஆகாய வெளியின் நடு இடம்'
'உலகின் தாள கதி'

'வருணிக்க இயலா வசந்தக் கூத்து' இவை நமது சிந்தனையைத் தூண்டும் வரிகளாகும்,

கபீர்தாசர் இயற்றியதாகக் கூறப்படும் கவிதைகள் :

| | |
|---|---|
| கோரக் நாத் கீ கோஷ்டி : | கபீருக்கும் கோரக் நாதருக்கும் நடந்த மத சம்பந்தமான உரையாடல். |
| இராமானந்த கீ கோஷ்டி : | இராமானந்தருடன் கபீர் நடத்திய வாக்கு வாதம், |
| சப்தாவளி : | 1000 உபதேசங்கள் அடங்கிய நூல். |
| மங்களம் : | 100 சிறுகவிகள் கொண்டது, |
| வஸந்தம் : | வஸந்த ராகத்தில் அமைந்தவை. |
| ஹோலி : | ஹோலியைப் பற்றி 200 பாடல்கள். |
| ரேக்தா : | ரேக்தா என்னும் பெயருடைய 100 செய்யுள்கள். |
| ஜீவன் : | பல மதங்களைப்பற்றி 500 செய்யுள்கள், |

ஹிந்தோளம் : தோத்திர வகையைச் சேர்ந்த 12 பாடல்கள்.

பாரஹ்மாஸா : 12 மாதங்களைப் பற்றிய கவிதைகள்.

சாஞ்சல் : இதே பெயருள்ள பாக்களில் அமைந்த ஸ்தோத்திரங்கள்.

சௌந்தீஸி : ஹிந்தியிலுள்ள 33 மெய் யெழுத்துக்களையும், 'ஊம்' என்ற எழுத்தையும் ஆதியில் கொண்ட 34 கவிதைகள்.

இரமைனீ : கபீர் சமயத் தத்துவங்கள் அடங்கியவை. 13

கபீர் 1600 பதங்களும், 4500 'சகி' என்னும் வகைப் பாடல்களும், 134 ரமைனிகளும், எழுதியதாகக் கூறுவர்; ஆனால் இவற்றுள் பல இடைச் செருகல்கள் என்பாரும் உளர். கபீர் கவிதைகளில் இறுதியில் 'கபீர் சொல்கிறார்' என்று வருகின்றது. இதுபோல் பிறரும் எழுதிச் சேர்த் திருக்கலாம் என்று 'கபீர் துறை'யில் ஆய்வு செய்யும் அறிஞர்கள் கருதுகிறார்கள்,

ஆகவே, கபீரின் சொந்தப்படைப்பாக 200 பதங்களை யும், 20 ரமைனிகளையும், 750 'சகிக்'களையும் ஆய்ந் தெடுத்து அலகாபாத் பல்கலைக் கழகத்தார் 1961 ஆம் ஆண்டு 'கபீர் கிரந்தாவளி' என்னும் பெயரில் வெளியிட் டுள்ளனர்.

இதற்கு முன்பும் பல கபீர் நூல்களும், கபீரைப் பற்றிய நூல்களும் இந்தி மற்றும் ஆங்கிலத்தில் 60 க்கும்மேற்பட்ட நூல்கள் வெளிவந்துள்ளன. கபீர் கவிதைகளைத் தொகுத்து நான்கு பிரிவுகளாக வெளியிட்டவர் சாந்தினி கேதனைச் சேர்ந்த 'க்ஷிதிமோகன் சென்' என்பவர் ஆவார் அவற்றுள் 100 கவிதைகளை இரவீந்திர நாத தாகூர் ஆங்கி லத்தில் மொழியாக்கம் செய்துள்ளார்.

'ஆதி கிரந்தம்' என்பது சீக்கியர்களின் சமய நூல். இந்நூலில் கபீர் தாசர் எழுதிய 541 கவிதைகள் சேர்க்கப்

பட்டுள்ளன. 'ஆனந்ததாஸ்' என்று அழைக்கப்படும் ஞானி கபீர்தாசரின் வாழ்க்கை வரலாற்றை கி. பி. 1645 இல் எழுதினார். இந்நூலுக்கு 'கபீர் சாஹப் கி பர்சாய்' என்று பெயரிட்டார். 14.

சுருக்கமாக எழுத நினைத்து ஆரம்பித்த முன்னுரை கபீர் கவிநயங்களில் சிலவற்றை எடுத்துக் காட்டிய காரணத்தினால் சற்றுக் கூடிவிட்டது. 1978 ஆம் ஆண்டு திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்திற்காகக் கபீர் தாசரின் வாழ்க்கை வரலாற்று நாடகம் ஒன்று எழுத ஆரம்பித்தபோது கபீர் கருத்துகள் என்னைக் கவர்ந்தன,

அன்று இட்ட விதையே இன்று கபீர் கவிமலர்களாக மலர்ந்துள்ளது. ஏறக்குறைய ஐந்து ஆண்டுகள் உழைப்புக்குப் பலன் கிடைத்துள்ளது. தமிழ் வடிவம் கொண்டுள்ளவை முழுவதும் மரபுச் செய்யுள் வடிவம் கொண்டவை என்று சொல்லிவிட முடியாது. எதுகை, மோனை தானாக வந்து அமைந்தால்தான் உண்டு, எதுகை, மோனைகளைத் தேடிக்கொண்டிருந்தால் மூலக் கவிஞரின் கருத்துகள் என்ன ஆவது? கருத்துக்கு முதல் இடம்; மற்றவைகளுக்கு பின்னிடம்தான் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலின் தொடக்கத்தில் அச்செழுத்துக்களில் உள்ள அடி இந்தி மூலப்பாடலின் தொடக்க அடியைக் குறிக்கும்.

சில சொற்களுக்குச் சுருக்கமான விளக்கம் தரும் பொருட்டு அருஞ்சொல் அகர வரிசை ஒன்று இணைக்கப் பட்டுள்ளது,

''கபீரின் கடவுள் யாரெனக் கேட்பின்
பிறப்பு,இறப்பு என்பதைப் பெறாத ஒருவன்]
கவலையும், துன்பமும் உருவமும் இல்லான்
அன்னையும், பிதாவும் அவனியில் இல்லான்
அவனே கடவுள்; ஆண்டவன் அவனே.''
(கபீர்தாசர்)

இனி நுழைவாயிலைக் கடந்து உள்ளே செல்லலாமா?

அன்புடன்,
**சேலம் அன்பரசு,**
சேலம்-636 002.

# XVI

## அடிக்குறிப்புகள்:

1 பக் 35—36 கபீர்தாசர் சரிதையும் கவிதையும், (கோ. கிருஷ்ணமூர்த்தி, தினமணி வெளியீடு, சென்னை) 1945.

2 page - 179 Encyclopaedia Britannica vol 13. (The University of Chicaco) 1967

3 கலைக்களஞ்சியம் மூன்றாம் தொகுதி (கலைக் களஞ்சியஅலுவலகம், சென்னை) 1956 மதிப்பு.

4 P - 23 A History of The Sikhs vol 1 Kushwanth singh (Oxford University press, New Delhi) 1978.

5 P—25 – 27 A History of the Sikhs vol I.

6 P - 128, Sri Rama to Ramakrishna (K. G. worthy, sri Rama Krishna math, Madras) 1977.

7 P - 122 - 123 Sri Rama to Sri Rama Krishna,

8 திருமூலர் திருமந்திரம் தந்திரம் 1 : 270

9 அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை யொடு ஐந்து சால்பு ஊன்றிய தூண், (திருக்குறள் - 983)

10 தாசமார்க்கம்-சரியை: ஆண்டாள் அடிமை நில- [திருநாவுக்கரசர்

சற்புத்திரமார்க்கம்-கிரியை: மகன் நிலை-திருஞானசம் பந்தர்
சகமார்க்கம் - யோகம்: தோழன் நிலை-சுந்தரர்
சன்மார்க்கம் - ஞானம்: இரண்டற்ற நிலை-மாணிக்க [வாசகர்

11 திருக்குறள் கூடா ஒழுக்கம் அதிகாரம் காண்க.

12 பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமை யான்-(திருக்:பெருமை 972)

13 கபீர்தாசர் சரிதையும் கவிதையும் பக்—68 கோ. கிருஷ்ணமூர்த்தி தினமணி காரியாலயம், சென்னை 1945.

14 பக்—'கபீர்' (பரஸ்நாத் திவாரி, நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா, புதுடில்லி) 1968.

## அருஞ்சொல் அகர வரிசை
## (GLOSSARY)

* **அல்லா :** 'அல்லாஹ்' என்ற சொல் மறைவான பொருள் என்று பொருள் படும். 'லா' என்னும் சொல்லில் இருந்து பிறந்தது என்று சிலர் கூறுகின்றனர். அல்லாஹ் என்னும் சொல் அகிலமெல்லாம் படைத்துப் பரிபாலிக்கும் உருவமற்ற ஒரு தனி முதல்வனைக் குறிக்கும் சொல்லாகும். இஸ்லாமிய மூல மந்திரத்தின் ஒரு பகுதியான 'லா இலாஹ் இல்லல்லாஹ்' (வணங்குதற்குரியோன் அல்லாஹ்வைத் தவிர வேறொருவனுமில்லை) என்பதன் சுருக்கமே அல்லாஹ் என்று கூறப்படுகிறது.

* **அலக்:** இது திருக்குர் ஆனின் 96 ஆவது அத்தியாய மாகும். இதில் 19 திருவசனங்கள் இருக்கின்றன. அண்ணல் நபி ஓரிரவு ஹிரா மலையில் இருக்கும் போது (ஸல்) ஜீப்ரில் (அலை) அவர்கள் இறைவனிடமிருந்து முதன் முதலாகக் கொண்டு வந்த திருவசனங்கள் ''உமது இறைவனின் திருப்பெயரைக் கொண்டு ஓதுவீராக! அவனே மனிதரை உதிரக் கட்டியிலிருந்து படைத்தான்'' என்று துவங்குகின்றன. இதில் உதிரக்கட்டி என்று பொருள்படும் 'அலக்' என்னும் சொல் பயன்பட்டிருப்பதால் இந்த அத்தியாயத்திற்கு 'சூரத் அலக்' என்னும் பெயர் ஏற்பட்டது.

**ஆதிசேடன் :** திருமாலுக்குப் படுக்கையாகப் பயன் படும் பாம்பு; நிலவுலகைத் தனது ஆயிரம் தலைகளால் தாங்கி நிற்பதாகக் கூறப்படும் பாம்புகளின் தலைவன்-

**இங்கலை :** இடது மூக்கு வழியே வரும் காற்று.

**இராமானுசர் :** விசிட்டாத்துவைதக் கொள்கையைப் பரப்பிய வைணவர். காலம் கி. பி. (1017—1137) சென்னைக்கு அடுத்த ஸ்ரீபெரும்புதூரில் பிறந்தார். தந்தை ஆசூரி கேசவப் பெருமாள், தாய் காந்திமதி. இவருடைய வேறு பெயர் எதிராசர். உபய வேதாந்தத்தை வெளிப்படுத்தியவர். பாரதநாடு முழுவதும் பயணம் செய்தவர்.

**இராய்தாஸ் :** கபீருக்கு முன்பு வாழ்ந்த செருப்புத் தொழிலாளி; ஞானி.

**ஊடை :** ஆடையின் குறுக்கு நூல்.

**காமம் :** தாமத குணத்துள் ஒன்று. சின்றின்பவெறி.

**காயத்ரி :** வேதத்தில் இருக்கக் கூடிய, புனிதமாகக் கருதத் தக்க வரிகள், காதுகளுக்குக் கேட்கும்படி ஒலிக்கப்படாமல், மனதில் மட்டும் தியானிக்கத் தக்கது. முழுமுதல் கடவுளாக சூரியனை நினைத்துச் செய்யும் குறுகிய வரிகளையுடைய வணக்கம். இது 'ரிக்' வேதத்தில் சன்ஹிதையின் மூன்றாம் அஷ்டகத்தின், நான்காம் பிரிவில், பத்தாம் பாடலாக உள்ளது, இதன் பொருள், ''நாங்கள் தெய்விகத் தன்மையுடைய கதிரவனின் மேன்மையான ஒளியினைத் தியானம் செய்கிறோம். அவன் எங்கள் உள்ளங்களை ஒளிபெறச் செய்வானாக.''

* **காஜி :** இஸ்லாமிய ஷரீ அத்தின்படி நீதி வழங்குவதற்காக நியமிக்கப்படும் அதிகாரிகளுக்கு இப்பெயர் கூறப்படுகிறது. இவர் இஸ்லாமிய மார்க்கச் சட்ட திட்டங்களை நன்கு அறிந்தவராகவும், சுதந்திர புருடராகவும் இருக்க வேண்டும்,

* **குர்ஆன் :** 'கர அ' என்பதில் இருந்து இது பிறந்த தென்பதே பெரும்பாலோர்கள் கருத்து. இதன் பொருள் 'ஓதுதல்' என்பதாகும். 'இக்ரஃ' (ஓதுக) என்பதே முதன் முதல் இறங்கிய திரு வசனத்தின் தொடக்கமாக இருப்ப தால் அச்சொல்லிலிருந்தே 'ஓதப்படுவது' என்று பொருள் படும் 'குர்ஆர்' என்னும் சொல் தோன்றியது என்று அவர்கள் கருதுகிறார்கள். கி பி. 610 ஆம் ஆண்டு ஆகஸ்டு 23 ஆம் நாள் ஞாயிறு பின்னேரம் (ரமலான் பிறை 27) இது இறங்கத் தொடங்கியது. ஹிரா மலையில் வீற்றிருந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இறை ஆணைப்படி ஜீப்ரீல் (அலை) என்னும் வானவர் இதனைக் கொண்டு வந்தார்.

**குரோதம்** கோபம்; உள்பகை ஆறினுள் ஒன்று.

**கேதார் :** இந்துக்களின் யாத்திரைத் தலங்களுள் ஒன்று.

**கோபால்ராய் :** ஆன்மாவின் நற்கதிக்கு வழிதேடாமல் உடலையும், செல்வங்களையும் பாதுகாத்துப் பிறகு அந்திம காலத்தில் வருந்தியவன். கபீர் காலத்தில் வாழ்ந்த செல்வந்தன்.

**கோரக்நாதர் :** வங்காள நாட்டுச் செவி வழிச் செய்திகளின்படி, இவர் புத்த சமயத்தைச் சேர்ந்தவராக இருந்தார் என்று கருதப்படுகிறது. இவருடைய புத்த சமயப்பெயர் 'இராம்ன வஜ்ரா' என்பதாகும்.

**கோவிந்தன் :** கண்ணனின் பெயர்களுள் ஒன்று, நந்த கோபனுடைய குடும்பத்தில் வளர்ந்தவன் 'கோவிந்தன்' என்பதன் பொருள் ஆநிரைகளைக் காப்பவன் என்பதாகும்.

**சகோரம் :** இரவு காலப் பறவை. நிலவைப் பார்த்து ஏங்கும் தன்மையுடையது.

**சனகாதியர் :** சனகர், சனந்தர், சனாதனர், சனத்குமாரர். பிரம்மன் இவர்களைப் படைத்துப் புதல் வரைப் பெறுவீர் என்று ஆணையிட்டான்; ஆனால் இவர் களோ புலன்களை அடக்கித் தவம் மேற்கொண்டனர்.

**சாளக்கிராமம் :** வைணவர்களால் வழிபடப்படும் புனிதக்கல். திருமாலின் மறுவடிவமாகக் கருதப்படுகிறது. மறை பொருளாகக் கருதப்படும் வரிகளை உடையது,

**சிவன் :** இந்து சமயத்தின் அழித்தல் தொழிலுக் குரிய கடவுளாகக் கருதப்படுபவர்.

**ஸுகதேவர் :** கபீருக்கு முன்பு வாழ்ந்த ஒரு ஞானி

**ஸ்வாஸம் :** காற்று

**சூத்திரர் :** நான்கு குலப்பிரிவுகளில் நான்காவதாக வைத்து எண்ணப்பட்ட பிரிவு.

**தர்மதாஸ் :** கபீர்தாசரின் சமகாலத்தில் வாழ்ந்த ஓர் அறிஞர்.

**தூரியாவஸ்தை :** யோகிகள் தன்மயமாய் நிற்கும் உயர் நிலை.

**துருவன் :** உத்தான பாதனனின் மகன். உத்தான பாதனின் இரு மனைவியர் சுநீதி, சுருசி என்பவர்கள். இவர்களின் துருவன் சுநீதியின் வயிற்றில் பிறந்தவன். உத்தான பாதன் சுருசியுடன் தனித்திருக்க துருவன் தனது தந்தையின் மடியில் உட்கார முயன்றபோது அவனுடைய மாற்றாந்தாயாகிய சுருசியால் கீழே தள்ளப் படுகிறான்,

இதனை துருவன் தனது தாயிடம்கூற, அவள் தனது இயலாத நிலையை விளக்குகிறாள். உடனே ஏமாற்ற மடைந்த துருவன் காட்டிற்குச் சென்றுதவம் மேற்கொண்டான். திருமால் காட்சிதருகிறார். துருவன் நினைவாக வடதிசையில் துருவமீன் நிலைத்து நிற்கிறது.

**நாமதேவர் :** காலம் கி. பி. 1270—1350 தையல் தொழிலை மேற்கொண்டு ஞானியாகவும், கவிஞராகவும் இருந்தவர். மகாராட்டிர மாநிலத்தைச் சேர்ந்தவர். சிக்கியர்களின் 'ஆதிகிரந்தம்' என்னும் நூலில் இவருடைய 60 பாடல்கள் சேர்க்கப் பட்டுள்ளன. பண்டரி புரத்தின் பெருமையை விளக்கியவர். நாமத்தின் பெருமையைச் சொல்லியே தேவனை அடையலாம் என்ற கொள்கையைப் பரப்பியவர்.

**நாரதர் :** தேவரிஷி என்று அழைக்கப்படுபவர். வீணையை எப்போதும் கையிலேந்துபவர். பதினெட்டு புராணங்களுள் ஒன்று நாரத புராணம். நாரதனைப் பற்றிய செய்தி பிரம்மபுராணத்திலும் பேசப்பட்டுள்ளது. மனுதரும சாத்திரத்தில் (1:35) நாரதர், பத்து பிரஜாபதிகளில் ஒருவராகவும், மகாபாரதத்தில் (1:66, 2553) கந்தர்வர்களுள் ஒருவராகவும் வைத்து எண்ணப்படுகிறார். விஷ்ணு புராணத்தில் பிரம்மாவின் இடுப்பில் இருந்து நாரதர் தோன்றியதாகக் கூறப்படுகிறது.

**நாராயணன் :** திருமாலின் பெயர்களுள் ஒன்று.

**பத்திரிநாத் :** நர நாராயண அவதாரத்தில் விஷ்ணு பத்திரியில் தவம் செய்ததாகக் கூறப்படுகிறது.

**பரசன் :** திருமாலின் பத்து அவதாரங்களுள் ஒன்று புராணங்களில் வரும் மூன்று இராமன்களில் முதன்மை யானவன். பரசுப்படை (மழு)யை ஏந்திய இராமன், க்ஷத்திரியர்களை அழிக்க ஒருகால் சூளுறை மேற்கொண் டவன். பிராம்மணராகிய ஜமதக்கினிக்கும் க்ஷத்திரியப் பெண்ணாகிய ரேணுகாவுக்கும் மகனாகப் பிறந்தவன்; பார்க்கவ முனிவன் என்னும் பெயரும் உண்டு.

**பாவு :** ஆடையின் நீள வாக்கில் உள்ள நூல்.

**பிங்கலை :** வலது மூக்கின் வழியாக வரும் மூச்சு.

**பிரகலாதன் :** இரண்ய கசிபுவின் மகன்: திருமால் பக்தன். 'திருமால் எங்கும் இருக்கிறான் என்பது உண் மையானால், அரண்மனையில் உள்ள தூணில் காட்ட முடியுமா?' என்று கேட்டு இரண்யன் தூணைப் பிளக்க, அதிலிருந்து நரசிங்க வடிவில் திருமால் தோன்றி இரண்ய கசிபுவை வதை செய்கிறார்; பிரகலாதன் ஆட்கொள்ளப் படுகிறான்.

**பிரம்மம் :** ஒப்பற்ற முழுமுதல் பொருளுக்குத் தத்துவ ரீதியாகக் கூறப்படும் பெயர். உண்மையறிவு இன்ப வடிவமாய் உலகம் முழுவதும் தோன்றி ஒடுங்குவதற்கு இடமாக உள்ள பொருள்.

**பிராம்மணன் :** நான்கு குலப்பிரிவுகளில் முதன் மையாக வைத்து எண்ணப்பட்ட பிரிவில் பிறந்தவன்.

**பூரி :** ஜகந்நாதர் ஆலயம் உள்ள இடம்.

**மாயா :** மூலப்பிரகிருதி, பொய்த்தோற்றம்.

**முகுந்தன் :** திருமாலின் பெயர்களுள் ஒன்று.

* **மூல்லா :** மௌல்வி என்ற சொல் எந்தப் பொருளில் அரபியில் பயன்படுத்தப்படுகிறதோ அந்தப் பொருள் பொதிந்த பார்சிச் சொல் இது. கல்விமான், அறிஞர் என்று இதற்குப் பொருள் விரிக்கலாம். 'மலா' என்றால் நிரப்புதல் என்று பொருள்படும் என்றும், அறிஞர் அறிவால் நிரப்பப் பட்டுள்ளதால் அவருக்கு முல்லா என்ற பெயர் ஏற்பட்ட தென்றும் 'கியாஸுல்லுகா'வில் கூறப்பட்டுள்ளது.

**மூலம் ஐந்து :** நிலம், நீர், தீ, காற்று, வானம்.

**மூன்று குணங்கள் :** வாதம், பித்தம், சிலேத்துமம்.

**மோகம் :** பாசம்

**லோபம் :** பேராசை. தானும் நுகராது பிறர்க்கும் ஒன்றைக் கொடுக்காத குணம். அகப்பட்ட பொருளைக் கைவிடாமை.

**விஷ்ணு :** இந்துக்களின் கடவுளர்களில் இரண்டாவ தாக வைத்து எண்ணப்படுபவர். காத்தல் தொழிலுக்கு உரியவர். வீர காவியங்களும், புராணங்களும் இக்கடவுளைப் பற்றிய கதைகளைக் கூறுகின்றன.

**விசிட்டாத்து வைதம்:** இக்கொள்கை இராமானுச ரால் உண்டாக்கப்பட்டது. 'உயிர் வேறு கடவுள் வேறு அல்ல; இரண்டும் ஒன்றே. ஜீவாத்மா பக்தியின் மூலம் பரமாத்மாவுக்குத் தொண்டு செய்து முக்தியைப் பெற வேண்டும்' என்பது இவருடைய கொள்கை.

**வியாசன் :** பராசர முனிவருக்கும், சத்தியவதிக்கும் பிறந்தவர். பிறந்தவுடன் காட்டிற்குச் சென்று தவச் செயலை மேற்கொண்டவர், இவருடைய இயற்பெயர் 'கிருஷ்ண த்வைபாயணர்' என்பது; ஆனால் இவர் வேதங் களைத்தொகுத்ததாலும், மகாபாரதத்தை இயற்றியதாலும் இவருக்கு 'வியாசர்' என்னும் பெயர் ஏற்பட்டது. ▱

---

* இக்குறியிட்ட சொற்களுக்கு உரிய விளக்கம், இஸ்லா மியக் கலைக் களஞ்சியம், 1, 2, 3 தொகுதிகளில் இருந்து தொகுக்கப்பட்டுள்ளது. நன்றி

அப்துற்-றகீம் யூனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் & புக் செல்லர்ஸ்,
சென்னை. 1976

## 1. சந்தின் ஜாத் ந பூசோ நிர்குனியான்

ஞானியைப் பற்றிய சாதியைக் கேட்பது
அவசியம் இல்லையையா

வாணிபர், வீரர், புரோகிதர் முதலியோர்
கடவுளைத் தேடுகிறார்

ஞானியைப் பற்றிய சாதியைக் கேட்பது
மடமை ஆகுமையா

நாவிதன் கடவுளைத் தேடியுள் ளான்ஒரு
தச்சனும் தேடியுள்ளான்;

துணிகளை வெளுப்போன் இராய்தாஸ் கூடத்
தேடியுள் ளான்இறையை

'ஸ்வாபசா' என்னும் முனிவனும் ஒருகால்
செருப்புத் தொழிலாளி

இந்துவும், முஸ்லிம் பிரிவினர் ஒன்றாய்க்
காட்டும் முடிவெல்லாம்

வேற்றுமை இல்லா முடிவே என்று
கபீரன் சொல்லுகிறான்

## 2, பாகோ நா ஜா ரே நா ஜா

மலரும் சோலைக்கு ஏகிடும் காரணம்
ஏன்சொல் வாய்நண்பா

மலரும் சோலை உன்னுடல் ஆகும்;
சோலைக்குப் போகாதே

ஆயிரம் பூவிதழ் தாமரை மேலே
அமர்வாய் நீ ஐயா;

தாமரை மலரின் மேலமர்ந் தேயதன்
அழகினை நோக்கிடுவாய்

## 3. பரிவிக் மீன் பியாசி

நீர்வாழ் மீனின் தாகத்தைக் கேட்டு
நான்சிரிக் கின்றேனே

சீர்பெறும் பொருள்உன் வீட்டில் இருப்பது
நீயேன் அறியவில்லை ?

காடு மலைகளில் தேடி அலைந்தும்
எங்கும் காணாயே

தேடும் ஆன்மா நீயறி யாவிடில்
மந்திரப் பயனென்ன?

காசியும், மதுரா சேத்திரம் செல்வாய்
உண்மை இங்கிருக்க!

## 4. கண்டா ஜேரல் கை யகி காத் மாஹீம்

நிலவொளி என்னுள் வீசு கின்றது
ஆனால் நிலவினைக் காண இயலுமோ ?
நிலவிடும் கதிரவன் இருப்பது போல
என்னுள் நிலவும் இருக்கின் றதுவே.

'நித்தியம்' என்னும் பெயருடை முரசு
என்னுள் அமைதி ஒலிஇசைக் கின்றது
எத்துணை முயன்றும் என்னுடை செவிக்கு
இம்மியும் அவ்விசை கேட்க வில்லையே.

மனிதனின் செயல்கள் பாழாய்ப் போகப்
பன்னெடுங் காலம் ஓல மிடுகிறான்
'யான்எனது' என்று ஏங்கி ஏங்கியே;
யான்எனது என்னும் செருக்கு* அடங்கினால்

கடவுளைப் பற்றிய காரியம் ஆகிடும்;
அவனை அறிந்திடும் நோக்கமே நம்தொழில்
அவனை அறிந்திடில் ஓய்ந்திடும் நம்தொழில்
மலரும் மலர்ந்திடும் கனிதர வேண்டியே.

கனியும் கனிந்திடில் மலரும் வீழ்ந்திடும்;
மானின் வயிற்றினில் கஸ்தூரி இருந்திடும்
கஸ்தூரி உள்ளதை மான்தான் அறியுமோ ?
நுனிப்புல் தேடியே மான்அலைந் திடுமே.

---

*யான்எனது என்னும் செருக்கு அறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த உலகம் புகும். (குறள்: 346)—ஒப்பு நோக்குக

## 5. அவதூ மாயா தஜீ ந ஜாய்

சொல்வாய் தம்பீ மாயையை எங்ஙனம்
நானும் மறுக்க இயன்றிடு மோதான்
நாடாக் கயிற்றை நான் அவிழ்த்து விட்டால்
ஆடையைப் பற்றி இருக்கின் றேனே

ஆடையை முழுதும் கழற்றிய பொழுதும்
உடலின் தோலெனைப் பற்றிடு கிறதே
ஆவல் அனைத்தையும் அடக்கிய பொழுதும்
எஞ்சியே உள்ளது வெகுளி ஐயா!

வெகுளியை அறவே விரட்டிய பொழுதும்
பேராசை என்னைப் பிடித்தே உள்ளது
பேராசை தன்னைப் போக்கிய பொழுதும்
தற்புகழ், செருக்குச் சேர்ந்தே உள்ளது

பற்றிலா மனதுடன் மாயையைத் தூரமாய்
எறிந்திடக் கல்விச் செருக்கும் உள்ளது
கபீரன் சொல்கிறான் சாதுவே! கேளாய்
உண்மை வழியினைக் காணுதல் அரிதே !

## 6. ஸாதோ ப்ரஹ்ம சுலோக் லகாயா

சாதுவே !

ஆண்டவன் தன்னைக் காட்டுதல் பொருட்டு
மாண்புடை பிரம்மம் தன்னைத் தோற்றினான்
பிரம்ம்ம் தன்னைக் காட்டுதல் பொருட்டு
என்றும் காணும் பொருள்களைப் படைத்தான்
செடியினில் விதையும் உள்ளது போல,
மரத்தினில் நிழலும் உள்ளது போல
வானில் சூனியம் உள்ளது போல,
நித்தியப் பொருள்கள் சூன்யத்தில் உள்ளன.
நித்தியப் பொருள்களின் அப்பால் இருந்து
நித்தியப் பொருளும் வந்தது பாரீர்
நித்தியப் பொருளின் நிலையில் இருந்து
அநித்தியப் பொருள்கள் அளவின்றிப் பெருகும்
நுண்ணுயிர் இருப்பது பிரம்மத்தின் உள்ளே
பிரம்மம் இருப்பதோ நுண்ணியிர் உள்ளே
இவைகள் எல்லாம் என்றும் உயர்ந்தவை.
மரம்,விதை, முளை இம் மூன்றும் அவனே:
மலர்,பழம், நிழல்இம் மூன்றும் அவனே;
கதிரவன், ஒளியும், ஒளிபெறும் பொருளும்,
பிரம்மம், மாயை, உயிரினம் அவனே;
உலகமும், மூச்சும், பொருளும் அவனே;
வரம்பும், வரம்பிலாப் பொருளும் அவனே

வரம்பும், வரம்பிலாப் பொருளையும் கடந்தவன்
தூய்மையாய் என்றும் நிலவு கின்றவன்
பிரம்மா, உயிரினம் இரண்டிலும் அவனே
சுயமாம் மனதுடன் திகழு கின்றவன்
ஜீவனில் இருப்பதும் ஒப்பிலா ஜீவனாம்
ஒப்பிலா ஜீவனில் உள்ளது முடிவாம்
முடிவினில் இருந்தே முதலும் தோன்றும்
கபீரின் மகிழ்ச்சியின் காரணம் கேளீர்
மேலோன் தரிசனம் கண்டது தானே!

## 7. சத்குரு சோய் தயா கர் தீன்ஹா

அறிந்திடாப் பொருள்களை அறிந்திடச் செய்ததென்
உண்மைக் குருவின் கருணையே ஆகும்
காலின்றி நடக்க, கண்ணின்றிப் பார்க்க,
காதின்றிக் கேட்க, வாயின்றிப் பருக.
சிறகின்றிப் பறக்கக் கற்றேன் அவனிடம்
இரவும் பகலும் இல்லா இடத்தில்
அன்பினைப் பெற்றே தியானமும் செய்தேன்
வாயினால் பருகாமல் அமிழ்தம் சுவைத்தேன்
தண்ணீர் பருகாமல் தாகம் தணிந்தேன்
இனியதாம் நல்லுரை கேட்டிடும் இடத்தில்
மகிழ்ச்சிக்கு எல்லையும் இல்லையே ஐயா
மகிழ்ச்சியின் இயல்பினைக் கூறவும் முடியுமோ ?
கபீரன் சொல்கிறான், 'குருவெனப் படுபவன்
சொல்லினுக் கடங்காத் தன்மையாய் உள்ளான்
சீடனுக் கேவழி காட்டியா கிடுவோன்'

## 8. போல்னா கா கஹியே ரே பாயீ

பேச்செனில் ஒருவன் பேசுவது என்ன ?
சொல்வேன் கேளாய் சோதர னே, நீ
பேசிடில் உள்பொருள் பறந்து போகும்
பேசிப் பேசியே கெட்டு விட்டது

பேச்சில்லை என்றால் எண்ணுவது எதனை ?
நல்லோர் நடுவில் பேசுவாய்; கேட்பாய்!
பொல்லார் நடுவில் பேசுதல் வேண்டாம்
நல்லோர் கேள்வி தருவதும் நன்றே

பொல்லா ருடன், நீ பேசுதல் வீணாம்.
கபீரன் சொல்வான் கேளாய் ஐயா
குறைகுடம் கூத்தினை ஆடித் தீரும்
நிறைகுடம் நிச்சயம் அமைதி தானே!

## 9. இஸ் காத் அந்தர் பாஹ் பஹீசே

காடும் வேடரும் கொண்டதோர் தோண்டி
இந்த உலகும், இறைவனும் இந்தத்
தோண்டிக் குள்ளே இருக்கிறார் ஐயா
ஏழு கடல்களும் எண்ணிலா விண்மீன்
இருப்பது இந்தத் தோண்டிக் குள்ளே
உரையிடும் கல்லும், பொன்னினை வாங்கும்
வணிகரும் இந்தத் தோண்டிக் குள்ளே
ஓயாது இசைக்கும் இசையும் இதனுள்
ஊற்றெழும் நீரும் இதனுள் உள்ளது
கபீரன் சொல்கிறான் கேளாய் ஐயா,
'தோண்டி இதற்குள் இருக்கிறான்
அன்பினுக் குரிய ஆண்டவன் தானே!

## 10. தோஹி மோரி லகன் லகாயே ரே பகிர் வா

பரதேசி யே! நான் உன்மேல் செலுத்தும்
அன்பை ஏற்றிட்டாய்

எந்தன் குடிசையில் உறங்கிய என்னைக்
கூவி எழச்செய்தாய்

உலக மாயையாம் ஆழ்கடல் தன்னில்
மூழ்கி இருக்கையிலே

உனதிரு கைகள் கொண்டெனை ஏந்திக்
காத்தருள் செய்தவன்நீ.

ஒரேயொரு சொல்லில் ஓர்நொடிக் குள்ளே
கண்ணீர் வரவழைத்தென்

கட்டுப் பாடுகள் யாவையும் நீக்கிக்
காத்தருள் செய்தவனே !

கபீரன் சொல்வான் பரதேசி யே! கேள்
கேட்டிடு வாய்ஐயா

உன்இத யத்தை என்னுடை இதயத்
தோடிணைத் தவனென்றே!

---

* பகிர் — பிச்சைக்காரன்

## 11. நிஸ் தின் கேலத் ரஹீ சகியான் சங்க்

அல்லும் பகலும் நண்பரோடு ஆடிக்
கூடி இருந்தேனே

சொல்ல ஒண்ணாத் துன்பம் இன்றெனை
அஞ்சிடச் செய்கிறதே.

மேலே உள்ளது ஆண்டவன் அரண்மனை
அதன்படி ஏறிடவே

அஞ்சி நடுங்குமென் இதயக் (கமலம்)*
நானென் செய்திடுவேன் ?

அவனது அன்பை நான்பெற் றாலும்
கர்வமும் கொள்ளேனே.

அன்பின் அண்ணலை எந்தன் இதயம்
என்றும் இணைந்திருக்கும்;

எந்தன் திரைகளை அகற்றி அவனையும்
உடலோடு அடைவேனே.

எந்தன் விழிகளை அன்பெனும் விளக்காய்
அவனுக் கேற்றிடுவேன்

கபீரன் சொல்கிறான் காது கொடுத்துக்
கேளாய் நண்பா, நீ

அன்பினைச் செலுத்தும் அடியவர் யாரென
அவனும் அறிந்திடுவான்

அன்புக் குரிய ஆண்டவன் தன்னை
நீ, நினைக் காவிட்டால்

உடம்பினை, அணிகலன் ஆபர ணங்களில்
கோலம் கொள்ளுவதும்,

ஒருகுடம் தைலம் கண்ணிமை நிரம்பப்
பூசிக் கொள்ளுவதும்,

பாரம் உனக்கு ஆகிடும் ஐயா
நீ,இதைக் கேளாயே!

---

*மொழி பெயர்ப்பாளரின் உருவகச் சொல்

## 12. தோர் ஹீரா ஹிரைல்வா கிகட் மே

அணிகலன்* மறைந்தது மண்ணுக் குள்ளே
அனைவரும் தேடி அலைகிறார் அதனை
கிழக்கில் தேடி அலைகிறார் சிலரும்
மேற்கில் தேடி அலைகிறார் சிலரும்
நீருள் சிலரும், கற்களில் சிலரும்
தேடித் தேடித் திரிகின் றாரே
கபீரன் சொல்கிறான், 'அணிகலன் மதிப்பை
மெய்யாய்க் கண்டு, பிறர்க்குக் கூறி
இதயப் போர்வையில் காத்தான்' என்றே.

---

* இறைவன் பெயர்

## 13. மன் தோ பார் உதர் காங்கி ஜெய்ஹோ

எனது இதயமே! எந்த எல்லையை
அடைய விரும்புகிறாய்?

பயணிகள் உன்முன் சென்றிடார்; பாதை
எதுவும் கிடையாதே

எல்லை வெளியிலே சலனமும், ஓய்வும்
எங்கே கிடைக்குமையா?

தண்ணீர் அங்கிலை, ஓடமும் அங்கிலை
ஓட்டுநரும் இல்லை

படகினைக் கரையுடன் கட்டுவ தற்குப்
போதிய கயிறுமில்லை

படகினைத் தள்ளும் மனிதரும் இல்லை
அறிந்திடு வாய், ஐயா

வானமும் இல்லை, பூமியும இல்லை
எப்பொரு ளும் இல்லை

கடற்கரை அதுவும் இல்லை; அங்கே
ஆழமும் அதிகமில்லை,

ஆன்மாத் தாகம் அடங்கிடும் இடத்தில்
உள்ளமும் உடலுமில்லை,

வெற்றிட மையா அங்கே நீயும்
சூனியம கண்டிடுவாய்

உந்தன் உடலில் உறுதி யாய் இரு
கால்களை ஊன்றிடவே

இதய (கமல)°மே ஆய்ந்தறி வாயே
வேறிடம் செல்லாதே

கற்பனை அனைத்தும் சாகவிட் டேநீ
கடுகி நடந்திடுவாய்

எண்ணிய இடம்நீ போவாய் என்று
கபீரன் சொல்லுகிறான்.

---

°மொழி பெயர்ப்பாளர் இதயத்தைக் கமலமாகஉருவகம் செய்தார்,

## 14. தரியா கி லஹர் தரியாவோ ஹை ஜீ

ஐயா!

ஆறும் அலைகளும் ஒருநுரை கொண்டவை
அலைக்கும் ஆற்றுக்கும் வேற்றுமை எங்கே ?
அலையெழுந் தாடினால் அதுவும் தண்ணீர்;
அந்தரத் திருந்து வீழ்வதும் தண்ணீர்
சொல்வாய் ஐயா இதன்முடி வெங்கே ?
அலையெனும் பெயரைக் கொண்டத னாலே
தண்ணீர் என்னும் பெயரை இழக்குமோ ?
மரப்பந் துகள்எனக் கூறும் உலகுகள்
பிரம்மமாம் ஆற்றலுக் குள்ளே அடக்கம்*
காணுவாய் அந்தப் பூஞ்சோலை அதனை
அறிவெனும் கண்களை அகல விரித்தே.

---

*பிரம்மம் வேருகவும் படைப்புகள் வேருகவும் நமக்குத் தோன்றினாலும் இரண்டும் ஒன்றே. தண்ணீரும், அலையும் வெவ்வேருகத் தோன்றினும் இரண்டும் ஒன்று என்பது போல.

## 15. கர் கர் தீபக் பரை

விளக்குகள் ஒவ்வொரு வீட்டிலும் எரியும்
குருடா! உன்னால் காணவும் இயலா
ஒருநாள் உனது கண்களும் திறக்கும்
உலகக் காட்சிகள் அனைத்தும் காண்பாய்
சாவெனும் விலங்கும் உனைவிட் டோடும
இறந்த பிறகும் ஒருவன் வாழ்ந்தால்,
மறுபடி அவனும் சாவது இன்றேல்
கேட்டிடப், பேசிட ஏதுளது ஐயா?
தனிமையில் யோகி வாசம் செய்வதால்
தன்னுடை வீட்டினைத் தூரம் என்கிறான்
பனைமரம் ஏறிக் கடவுளைத் தேடினும்
ஆண்டவன் இருப்பது அருகிலே அறிவாய்
''வாழ்வெனும் உண்மை ஊற்றும தருகில்
அதனால் கற்சிலைக் கடவுளைப் படைப்பீர்
ஐயோ'' என்று பிராமணப் புரோகிதர்
வீடுகள் தோறும் சென்று மக்களை
நம்பிட நம்பிடச் செய்கிறார் ஐயா
'ஆண்டவன் எச்சுவை உடையவன் என்று
சொல்லவும் நம்மால் ஆகுமோ ஐயா
யோக ஜபங்கள் பாவபுண் யங்கள்
கடவுளுக் காக இல்லை'யென்று
காசியில் வாழும் ஏழைச் சேணியன்
கபீரன் நன்றாய் சொல்கிறான் ஐயா.

## 16. யா தர்வர் மே ஏக் பகேரு

இந்த மரத்தில் உள்ள பறவை *
வாழ்வை இன்பம் என்று எண்ணி
ஆடிப் பாடி மகிழுகின்றது

அந்தப் பறவை இருக்கும் இடத்தை,
ஆடிப் பாடும் காரணத்தின்
பெருஞ்சுமையை யாரறிவாரோ ?

கிளைகள் வீசும் ஆழ்ந்த நிழலில்
பறவை கூடு கட்டிக் கொண்ட
கூட்டின் தன்மை கூற வேண்டுமோ?

மாலை கூட்டில் வந்து தங்கும்
விடிந்து விட்டால் ஓடிப் போகும்
காரணத்தை வாயால் கூறுமோ ?

என்னுள் பறவை உள்ளதென்று
எனக்கு யாரும் சொல்லவில்லை
கறுப்பு வெளுப்பு உருவம் அதற்கில்லை

அன்பு நிழலில் பறவை தங்கும்
யாரும் அதனைப் படைக்கவில்லை
அந்தம் இல்லா நிலைத்த பொருள் அது

என்று பறவை வருகு தென்றும்
பறந்து செல்லும் காலத்தையும்
யாரும் எடுத்துச் சொல்லக் கூடுமோ ?

உடன்பிறப்பே ! சாது ! கேளாய்
பறவை தங்கும் இடந்தனை அறிந்து
சான்றோர் எடுத்துச் சொல்லவும் கூடுமோ ?

---

*ஆன்மா (அல்லது) உயிர்

## 17. ககன் மத் கைப் நிசான் கடே

கருநிழல் தங்கிய சந்திரனும்
கூடிய தாரகை முத்துகளும்
பொருந்திய வானக் கோயிலிலே
கண்புலன் ஆகாக் கொடியுண்டு

சூரிய சந்திரர் ஒளிகண்டும்
உன்மனம் மௌனம் கொள்கிறதே
பேரொளி அமுதம் குடித்தோர்கள்
பித்தரைப் போலே அலைவாராம்.

## 18. ப்ரஹ்ம கா தாலா லகா மஹல் ரே

தவறெனும் தாழ்ப்பாள் கதவினை மூடினால்
அன்பெனும் திறவுக் கோலால் திறப்பாய்
கதவம் திறந்து காத்திருப் பாயேல்
காதலன் அவனை எழுப்பலாம் ஐயா

காசியில் வாழும் ஏழைச் சேணியன்
கபீரன் சொல்வான், 'கேளாய் ஐயா
யோசனை செய்வாய் இதுபோல் விடாதே
போனால் வருமோ பொன்னெனும் வாய்ப்பே:

## 19. ஸைன் பின் தர்த கராஜீ கோய்

அன்பனை நானும் பிரிந்த போதென்
இதயம் தனில்இருள் சூழு கின்றது
பகலில் அமைதி அரிதாய் ஆனது;
இரவில் தூக்கம் இல்லை என்பதை
மனம்திறந் தெவரிடம் கூறு வேனோ ?
இரவோ இருள்தான்; தலைவன் என்னுடன்
இல்லா ததினால் பொழுதும் செல்லும்
பயத்தால் என்னுடல் நடுங்கு கின்றது
'தலைவ னொடுநான் சேர்ந்திருப் பதுபோல்
வேறொரு இன்பம் இல்லை' என்று
கபீரன் சொல்வான் கேளாய் நண்பா.

## 20. ஸாதோ கோ ஹை கப் ஸே ஆயோ

சாதுவே !

நீயார் ஐயா எப்போ திங்கே
வந்து தோன்றினாய் ?

பேரருள் ஆற்றல் எங்கே இருந்து
தோன்று கின்றது ?

அவனது படைப்பின் அனைத்திலும் உள்ளே
எங்ஙனம் ஆடுகின்றான்?

நெருப்பு இருப்பதோ விறகின் உள்ளே
நெருப்பை விறகினில்

தோன்றிடச் செய்யும் ஆற்றல் படைத்தோர்
யார்தான் கூறிடுவீர்.

நெருப்பின் ஆற்றல் சாம்பலில் இருந்து
எங்கே போனதையா ?

'எல்லையில் லாதவன், அகப்படு வோன்' என
உண்மைக் குருஉரைப்பார்

'கேட்போர் அறியும் எளிய மொழியில்
பிரம்மா சொல்லுகிறான்'

என்றே சொல்வான் காசியில் வாழும்
கபீரன் என்போரனே.

## 21. மன மஸ்த் ஹுவா லப் க்யா போலே

இதயமே அன்பில் மூழ்கி இருக்க
இனியதோர் சொல்லும் பேச வேண்டுமோ ?
வைரமென் பேழையில் பூட்டி வைத்ததை
நித்தமும் திறந்துஏன் அதனைப் பார்த்திட?

தராசுத் தட்டினில் பாரம் குறையுமேல்
மற்றொரு தட்டும் கீழே இறங்கிடும் ;
சுமையுடன் பொருளும் உள்ள போதினில்
அளப்பதன் காரணம் யாது கூறுவீர் ?

மலைகளுக்கு அப்பால் மறைந்த பொய்கையை
அடைந்த அன்னமும்° சாக்கடை நாடுமோ?
தலைவன் உன்னுள் இருக்கும் போதினில்
ஊனக் கண்களால் எதனைக் காண்கிறாய் ?

காசியில் வாழும் ஏழைச் சேவகன்
கபீரன் சொல்வான் கேளாய் ஐயா
'கண்களைக் கவர்ந்தென் காட்சியில் நிறைந்தோன்
அவனென் மனதில் இணைந்து விட்டானே.

° ஆன்மா.

## 22. ககன் தமானா பாஜியோ பரியோ நிஸ்னை காவோ

வானின் எதிரொலி போர்ப்பறை யாக
ஒலிக்கப் படுகிறதே

போர்த்தள வாடக் கருவிகள் யாவும்
சந்திக் கின்றனவே

வாகை சூடிடும் வீரனும் போர்க்களம்*
நுழைந்தே விட்டானே

இதுவே நேரம் போரினைத் தொடங்க
ஏழைகள், எளியோரும்,

ஆதரவு அற்றோர், அனைவருக் காகவும்
போர்க்களத் தில்இருந்து

ஓடி விடாமல் அங்க அவயவம்
விழுப்புண் கள்பெற்றே

வீழ்பவ னைத்தான் உண்மை வீரனென்று
கபீரன் சொல்லுகிறான்.

---

*பக்தி இயக்கம்.

## 23. வாலம் ஆவோ ஹமாரே கேஹ் ரே

எந்தன் மனமும், எந்தன் உடலும்
உன்னைத் தேடியே வருந்து கின்றது
எந்தன் அன்பினுக் குரியோய் ! எந்தன்
இல்லம் தேடிநீ வந்திடு வாயே.

நான்தான் உந்தன் மணமகன் என்று
நானில மக்கள் சொல்லும் போது
நாணம் கொள்கிறேன்; எந்தன் இதயம்
உன்இத யத்தைத் தொடவும் இல்லையே.

அன்பிற்கு அழகா இது? நீ கூறாய்
அன்ன, ஆகாரம் அனைத்தும் விட்டேன்;
கண்துயில் விட்டேன், எந்தன் இதயம்
கணப்பொழு தேனும் ஓய்தலும் இல்லை.

தேடும் பொருள்உனை நான்பெறா ததினால்
கதவாய் மாறிக் காத்திருக் கின்றேன்
தாகத் திற்கோர் நீரினைப் போல;
மணப்பெண் ணுக்குத் தலைவன் அல்லவோ?

தலைவியின் செய்தியைத் தாங்கிச் சென்றிடும்
தகைமை யுள்ளவர் யார்இருக் கின்றார்?
கபீரன் இழந்தான் அமைதியை 'அவனை'
நினைத்தே நோகிறான் நோகிறான் ஐயா.

## 24. ஸாதோ ஸஹஜை காயா ஸாதோ

ஓ சாதுவே !

எளிய வழியில்° உனது உடலைத்
தூய்மை செய்வாயே

ஆலமரத்தின் விதையும் அதனுள்
மறைந்து இருக்குமாம்

விதையின் உள்ளே இருக்கும் பொருள்கள்
மலர்கள் கனிகளாம்

மரத்தி னுடைய நிழலும் கூட
விதையில் அடக்கமே

உடலின் உள்ளே இருக்கும் அந்த
மூலம் தோற்றமாம்.

நிலமும், நீரும், வானும், காற்றும்,
தீயும் மண்ணுமே

அவனை விட்டு வேறு எங்கும்
இருப்ப தில்லையே.

ஓ, காஜியே ! ஓ, பண்டிதனே !

ஆன்மாவில் இல்லாப் பொருளும் உண்டோ?
சொல்லிடு வீர்ஐயா

நீர்நிறை தோண்டி நீர்மேல் உள்ளது
தோண்டியின் உள்ளே

°சகஜ்—யோஹ்—எளிய வழி

நீரும் உள்ளது; ஆனால் வெறுமை
கொண்டே உள்ளதையா

பெயரிட முடியாப் பொருளாய் உள்ளது
இருந்த போதிலுமே

இருவகை யான தவறுகள் செய்வர்
கபீரன் சொல்லுகிறான்.

நீங்கள் அறிந்த உண்மைப் பொருளின்
உண்மையை அறிவீரே

உண்மை அவனது சொல்லே ஆகும்
அவனது சொல்லினையே

அவனே உரைப்பான் அவனுக் காகவே
படைப்பவனும் அவனே.

## 25, ரீது பாகம் நியார் ஆனி

வசந்த காலம் அருகில் உள்ளது
எந்தன் அன்பன் தன்னிடம் என்னை
இணைத்து வைப்பார் யாரே ஐயா?
அனைத்திலும் அழகாய் அவனே இருக்க,
அன்பன் அழகுத் திருஉரு வத்தின்
அழகை எந்தன் வாயால் கூறச்
சொற்களை எங்குத் தேடிச் செல்வேன்?
உலகின் ஓவியக் காட்சிகள் தம்மில்
அவனது நிறமே காண்கின்ற ததனால்
உடலையும், உளத்தையும் கவர்ந்திடும் அந்நிறம்
இதனை அறிந்திடும் திறமை படைத்தோர்
வருணிக்க இயலா வசந்தக் கூத்தினை
எதுவென அறிவார்; கபீரன் சொல்வான்
'கேளாய் தம்பீ! இதனை உணர்ந்தோர்
கடவுளைப் பலர்எனச் சொல்வதும் இல்லையே.

## 26. ஸதீ கோ கௌன் ஸிகாவ்தா

இறந்த கணவனின் ஈமத் தீயினில்
கைம்பெண் தன்னை மூழ்கிடச் சொல்லி
ஓயாது உரைக்கும் மனிதர் எவரோ?
துறவற முறையால் பேரின்பம் காண
ஓயாது உரைக்கும் மனிதர் எவரோ?

## 27, பி லே ப்யாலா ஹோ மத்வாலா

கோப்பையில் உள்ளது முழுவதும் பருகுவாய்;
குடிப்பாய் அரியெனும் அமிழ்தம் தன்னை
கபீரன் சொல்வான், 'கேளாய் சாதுவே!
உள்ளங் கால்முதல் உச்சந் தலைவரை
மனதில் நிறைந்தது நஞ்சே அறிவாய்!

## 28. ஜாக் பியாரி அலே கான் சவாரி

தூங்கி வழியாதே, பெண்ணே !
கண்விழித் திடுவாயே;

ஓங்கிய இருள்க ழிந்தே
உதயம் ஆனதுவே,

இரவைக் கழித்ததுபோல் பகலைப்
போக்கிடச் சம்மதமோ ?

கண்விழித் தவர்எல்லாம் அணிகலன்
அள்ளி அணிந்தார்கள்

புத்திஇ லாப்பெண்ணே ! தூங்கையில்
அனைத்தும் இழந்தாயே

காதலன் கண்ணியவான்; நீயோ
அறிவிலிதான் பெண்ணே.

காதலன் வருகையிலே படுக்கை
விரித்திட மறந்தாயே.

பித்தம் கொண்டவளே பொழுதினைப்
போக்கிக் கழித்தாயே

இளமையைப் போக்கிவிட்டாய் வீணாய்க்
கணவனை உணராமல்

பள்ளி அறையினைப்பார் அதுவும்
வெறுமை காணுதடீ:

அன்பினை மறுத்ததினால் அவனும்
இரவே சென்றுவிட்டான்

எழுவாய் எழுவாயே பெண்ணே
நினைத்தினிப் பயனென்ன ?

கபீரன் சொல்லுகிறான், 'பெண்ணே!
யாரது இதயத்தில்

அவனது இசையென்னும் அம்பும்
பாய்ந்து தைத்திடுமோ,

அவளே விழிப்பவளாம் பெண்ணே
அறிந்திடு வாய்நீயே.

## 29. தர்வர் ஏக் மூல் பின் தடா

புதுமையாம் மரமொன்று உள்ளது கேளீர்
வேறொன்று இல்லா மரமது ஐயா
மலர்தலும் இன்றியே பழுத்திடும் மரமாம்,
இலையும், கிளையும் இல்லா மரமாம்
தாமரை மலராய் முழுவதும் ஆனது
பறவைகள் இரண்டு பாடிடும் அங்கு
குருவும்*, சீடனும்° அவைகள் ஆகும்
சீடனும் தேடிப் பல்வகைப் பிறவிக்
கனிகள் தம்மைச் சுவைத்தறி வானே.
குருவும் சீடனைக் கண்டு மகிழ்வான்
கபீரன் சொல்வான், 'அரிதாம் ஒன்றை;
தொலைதூ ரத்தில் பறவை இருப்பினும்
பார்வைக்கு எளிதாய்த் தோன்று கின்றது
அருவ மெனினும் உருவங்கள் இடையே
உள்ள தையா உணர்வீர் நீர், அவ்
உருவின் பெருமையைப் பாடு வேனே.

---

* ஜீவாத்மா
° பரமாத்மா

## 30. அப் மோஹி நாசிபௌ ந ஆவை

கூத்தும் எனக்கென இனிநடக் காது
என்மனம் இசையை இனிஇசைக் காது
சூனியம் இப்போது நிறைந்திருக் கிறது
ஆசையாம் தோண்டி உடைந்து விட்டது
ஆசையால் ஆடையோ * பழமை ஆனது
பொய்க்காட்சி அனைத்தும் போனது தொலைவில்
போதிய வேடம் நான்ஏற்று விட்டேன்
வேறெந்த வேடமும் எனக்கென்று இல்லை
உற்றார், நண்பர் எனைவிட்டு ஓடினர்
இராம நாமமே என்துணை ஆனது
அபினயம் இனிமேல் எனக்கொன்றும் இல்லை
துன்பம் யாவுமே மறைந்து போனது
கபீரன் சொல்வான் இராமனின் அருளால்
பெற்றான் பெரிய சன்மானம்° தானே

---

* சோல்னா—நாடகம் ஆடுபவர் இடுப்பில் கட்டும் ஆடை
° முழுஞானம்.

## 31. ஏ வவல் அல்லாஹ் நூர் உபையா

*ஆதியில் ஒளியைப் படைத்தவன் அல்லா*
*அவனது ஆற்றலே அனைத்தையும் படைத்தது*
*ஒன்றாம் அந்த ஒளியில் இருந்தே*
*அனைத்து அண்டமும் படைக்கப் பட்டன.*
*தீண்டப் படாதோர், உயர்ந்தோர் இதில்யார்?*
*படைப்பவன் இருப்பது படைப்பின் உள்ளே*
*படைப்புகள் இருப்பதோ படைப்பவன் உள்ளே*
*அண்டங்கள் அனைத்தும் அவனது நிறைவே.*
*வடிவங்கள் பலவாய் மண்ஒன்றி னாலே*
*அனைத்து உயிர்களை 'அவனே' படைத்தான்;*
*மண்ணால் செய்த பானையும்° இல்லை*
*பானையைச் செய்யும் குயவனும்* இல்லை*
*எல்லை யற்றது எதிலும் வாழ்வது*
*அவனது விருப்பினால் அனைத்தும் நடப்பதாம்*
*தெய்வீக விதியினை அறிந்திடு பவர்க்குக்*
*கடவுள் ஒன்றென அறிந்து கொள்ள*
*நொடியெனும் நேரமும் தேவை இல்லையே.*
*உணரும் ஒருவனே 'அவனது' அடியார்*
*அல்லாவும், அலக்கும் எல்லையில் அடங்கார்*
*வெளியிட முடியா இந்த உண்மையே*
*எனது தலைவன் எனக்கு உணர்த்தினான்*
*கபீரன் சொல்கிறான், 'இதனை உணர்ந்தேன்*
*எனது ஐயங்கள் அகன்று போயின*
*எங்கும் நிறைந்த தூய உண்மையின்*
*தோற்றம் தன்னைக் கண்டுகொண் டேனே.'*

---

° *உயிரினங்கள்*

* *படைப்போன்*

## 32. உப் ஜை நிபஜ் ஸைமல்

கண்ணில் தெரியும் இந்த உலகம்
தோன்றி மறைகிறது

கால எல்லையின் முடிவு தன்னில்
அனைத்தும் மறைந்திடுமே:

அவ்வாறு இருக்க உனது இருப்பிடம்
உலகம் தான் என்று

கூறிடு கின்றாய் மனிதா! நீயும்
வெட்கம் கொள்ளாயோ?

பலவகை உணவால் வளர்க்கப் பட்ட
இந்த உடலுமே

கொழுந்து நெருப்பில் எரிந்து போகும்
இறுதி நாளினிலே

நறுமணத் தைலம், சந்தனக் குழம்பு
பூசிய இவ்வுடலும்

ஈமத் தீயின் விறகினில் எரிவது
இறுதில் நிச்சயமே

கபீரன் சொல்வான், 'நற்குணத் தோனே!
கேளாய் நீயும்தான்

அழகிய உடலும் அழிவது திண்ணம்
அந்த நாளினிலே

ஐயம் இதிலே இம்மி யேனும்
இல்லையே ஐயா

### 33. ஆயெள தின் கௌனே காஹேர

பல்லக்கு வந்தது என்னை ஏந்திக்
காதலன்1 இல்லம் அழைத்துச் சென்றிட
ஊற்றெழும் மகிழ்வாம் இதயப் பாதையில்
பல்லக்கை எடுத்துச் சென்றனர் ஐயா;

பல்லக்கு ஏந்துவோர்2 என்னைச் சுமந்து
திக்கிலாக் கானகம்3 அழைத்துச் சென்றனர்
எந்தன் உறவினர் யாரும் இல்லாக்
கானகம் அதன் நிலை சொல்லவும் வேண்டுமோ?

பல்லக்குச் சுமப்போரே!

உங்கள் கால்களில் வீழ்ந்து வணங்குவேன்
கொஞ்சம் பொழுது பொறுப்பீர் எந்தன்
உறவின் நண்பர்4 இருக்கும் இடத்தில்
என்னை எடுத்துச் சேர்ப்பீர் ஐயா

ஓ, சாதுவே!

ஊழியன் கபீரன் சொல்கிறான் கேளாய்,
'வாங்கல் விற்றல் முடித்துக் கொள்வாய்
நல்லது கெட்டது முடித்துக் கொள்வாய்
நீ செல்லும் இடத்தில் கடைத்தெரு இல்லையே.'

---

1 இறைவன்
2 இறைவனை அடைய வழிகாட்டுபவர்கள்
3 தவறான வழிமுறைகள்
4 இறைவன்

## 34. நாமைன் தர்மி நஹின் அதர்மி

நானொரு பக்தனும் அல்லன்
நாத்திக னும்நான் அல்லன்
சட்டங்க ளாலும், அறிவினாலும்
வாழ்பவன் நானும் அல்லன்.

காது கொடுத்துக் கேட்பதும்
பிறருக்கு உரைப்பதும் நானல்லன்:
ஆண்மையும், அடிமையும் நானல்லன்:
விடுதலை பெற்றும், அடிமைத்

தளையில் சிக்கியோன் நானல்லன்:
யாருமில்லா இடத்தில் இருப்பேன்:
அண்மையில், தொலைவினில் நானில்லை.
நரகமும், சுவர்க்கமும் நான் விரும்பிச்

சென்று சேர்பவன் நானல்லன்:
பணிகள் அனைத்திலும் நான் நீங்கி
இருப்பினும் அனைத்தும் செய்கின்றேன்
சிலரே அறிவார் என்பொருளை

என் பொருள் அறிந்த ஒரு சிலரே
அசைவிலா இடத்தில் இருப்பாராம்
கபீரன் என்னும் நெசவாளி
ஆக்கவும் அழிக்கவும் விரும்பாதோன்.

## 35. ஸா ஹப் ஹம் மேன் ஸா ஹப் தும் மேன்

ஒவ்வொரு விதையிலும் உயிர் இருப்பது போல்
மேலோன் உன்னிலும், என்னிலும் உள்ளான்
ஊழிய னே! நீ செருக்கினை நீக்கித்
தேடுவாய் அவனை உந்தனுக் குள்ளே
அவ்வுல கிடைநான் அமர்ந்திடும் போது
இலட்சக் கணக்காய் சூரியர் ஒளிர்கிறார்
நீலக் கடல்நிறம் வானில் திகழும்.
வாழ்வின் அச்சமும், மாசுகள் அனைத்தும்
அகன்று விட்டன அறிவீர் ஐயா!
யாரும் இசைத்திடா மணியின் இன்னிசை
உற்றுக் கேளீர்; இன்பம் அனைத்தும்
அன்பெனும் ஒன்றால் பெற்றிடு வீரே!
தண்ணீர் இன்றியே மழைபொழி கின்றது
ஒளியின் கதிர்களே ஆறுகள் ஆகும்.
அன்பெனும் ஒரு பொருள் அகிலத்தை ஆளும்.
யார்அறி வார்இதை? அறிவார் சிலரே
அறிவினால் அதனை உணர்ந்திட நம்பிடும்
அனைவரும் கண்ணிலாக் கபோதிகள் ஆவார்.
அறிவினால் அறிவோம் என்றிடும் அறிவுக்
கோவிலோ அனைத்தையும் கடந்தது அறிவீர்
கபீரன் பெற்ற ஆசீர் வாத
அரும்வழி யாதெனக் கேட்பீர் ஆயின்,
'அவனது' உடலெனும் தோண்டியின் உள்ளே
மகிழ்ச்சியாய் இருந்து பாடிய தாகும்.
பாடிய பாட்டின் பொருள்எது என்றால்
ஆன்மா உடன் ஒரு ஆன்மா கலப்பது:
கவலைகள் அனைத்தும் மறந்திடச் செய்வது
வெளியே செல்லும் அனைத்தும் விரட்டி
நன்மைகள் அனைத்தும் நாடுதல் தானே!

## 36. பரமாதம் குரு நிகட் விராஜன்

எனது இதயக் கமலமே!

இணையொன் றில்லா ஆன்மாதான்
பெரும்பே ராற்றல் எசமானன்
உந்தன் அருகில் இருக்கின்றான்
எழுவாய் எழுவாய் எழுவாயே!

உந்தன் தலையில் அவன்கால்கள்
படும்படி நீயும் நின்றிடவே
அன்பிற் குரியோன் அவனுடைய
பாதம் தேடி ஓடிடுவாய்!

பன்னெடுங் காலம் கண்மூடித்
தூங்கிக் கழித்து விட்டாயே
காலப் பொழுது புலர்ந்துவே
கண்களைத் திறக்கக் கூடாதோ?

## 37. ஸாதோ யஹ் தன் தாத் தன்வுந கா

இனிய சாதுவே! இந்த உடல்தான்
அவனது வீணை

நரம்புகள் அதிலே கட்டிய ஒருவனும்
அவனே ஆகிடுவான்:

நரம்பினை இசைத்துப் 'பிரம்மம்' என்னும்
இசையை எழுப்பிடுவான்

நரம்புகள் அறுந்து, சாவிகள் ஒடிந்துப்
பாழா கியபிறகு

மண்ணில் வீழ்ந்திடும் மண்ணால் ஆகிய
வீணை மண்ணினுக்கே.

காசியில் வாழும் ஏழைச் சேனியன்
கபீரன் சொல்லுகிறான்

இனிய இசையைப் பிரம்மம் தவிர
இசைப்போர் யாருமில்லை.

## 38. லங்கா ஸே கோட் ஸமுந்த் ஸீ காயே

கடலெனும் அகழியால் சூழ்ந்த இலங்கைக்
கோட்டையில் வாழ்ந்த கோமான் இராவணன்
குலத்தோடு அவனும் மறைந்து போனான்
என்ன வரத்தை நான்கேட்பது ஐயா?
நிலைத்து இவ்வுலகில் வாழ்ந்திட விரும்புதல்
ஒருவர்க்கும் இயலாத தன்மை அறிவீர்
நமது ஒவ்வொரு பார்வையின் முன்பே
உலகின் காட்சிகள் மறைகிறது ஐயா
இராவண வேந்தனின் எண்ணிலா மரபினர்
அனைவரும் மாண்டனர்: அவனது வீட்டில்
விளக்கொன்று எரிக்க யாருமே இல்லை.
சூரிய, சந்திரர் இராவணன் வீட்டின்
அடுப்பங் கரையில் நெருப்பாய் இருந்தனர்
துணிகளைத் தூய்மை செய்ததோ நெருப்பு°
இவ்வாறு அழிந்தான் வலிய வேந்தன்
தெய்வீக ஞானமே கடவுளில் மனதைக்
குவித்து வைக்கும்; அங்கே மனமும்
நிலைபெற் றிருக்கும்; அலைவதும் இல்லை.
கபீரன் சொல்கிறன், 'கேளாய் லோயீ! *
கடவுள் பெயரால் செய்யும் பக்தியே
வீட்டினைத் தரும் இதை உணர்ந்திடு வாயே.

° தீக்கடவுள்.

* கபீரின் மாணவி

## 39. ஆஸன் பவன் தூரி கரி ரவுரா

பிராணு யாம ஆசனம் அனைத்தும்
அகற்றிடு வீரே

சூது நினைப்பினை நீக்கிப் பாடுக
அரியின் பெயரினையே

ஊது கொம்பினை, மோதிரம் மெருகிடப்
பயனெது கூறிடுவீர்

மேனி முழுவதும் மேதகு நீறினைப்
பூசிப் பயனென்ன?

பேணி ஒழுக்கம் காப்பவன் எவனோ
அவனே இந்து வென்போன்

அவனியில் அவனே முகம்மது வழிசெலும்
புனிதனும் ஆகிடுவான்

ஆழ்ந்த தியானத்தில் இருப்பவன் அவனே
உண்மை யோகியென்போன்

உண்மை ஞானத்தைப் பெற்ற ஒருவனே
பிராமணன் ஆகிடுவான்

கவனமாய் இராமெனப் பலமுறை சொல்லப்
பலநலன் பெறலாமே

கபீரன் சொல்வான் வேறொரு செயலும்
செய்திட வேண்டாமே!

## 40. அவதூ பேகம் தேஷ் ஹமாரி

ஓ, சாதுவே !

வீட்டுல கத்தை விரும்பிடும் எவரும்,
அரசனும் ஆண்டியும் அனைவரும் கேட்க,
வாய்விட் டலறி அனைவர்க்கும் உரைப்பேன்
'எனது நீள் நிலம்'1 கவலைஇல் லாதது
என்நிலம் தங்கிநீர் வாழ்வீர் ஐயா
தளர்ந்த மனத்தில் தாங்க முடியாப்
பாரம் சுமப்போர் தங்கள் சுமையை
என்நிலம் தன்னில் இறக்கி வைப்பீரே.

உடன்பிறந் தோரே!

இக்கரை கடந்து மறுகரை அடைய
மனமுள் ளவர்கள் வாழ்வீர் இங்கு
என்நில இயல்பினை இயம்புவேன் கேளீர்
வானும் மண்ணும் இல்லா நிலமிது:
நிலவும் மீனும் இல்லா நிலமாம்
எந்தன் நிலமாம் அவைக்களந் தன்னில்
உண்மையின் பேரொளி வீசு கின்றது
கபீரன் சொல்கிறான் உடன்பிறப் பே! கேள்
வாய்மையை க்காப்பாய்2 வேறொன்றும் வேண்டாமே!

---

1 கயிருடைய வழி
2 மனத்துக்கண் மாசுஇலன் ஆதல் அனைத்து அறன்
[குறள் - 34]

### 41, ஸைன் ஸே லகன் கதின் ஹை பாயீ

எந்தன் தலைவனை அடைந்திடும் செயல்தான்
எத்துணைப் பெரிதோ!

மழையின் நீரினைத் தேடி அலைந்திடும்
மழையின் பறவையுமே

மழைநீ ருக்கு ஏங்கி ஏங்கியே
தாகத் தால்அழியும்

மோக இசையைக் கேட்டு மயங்கி
மானும் முன்னேறும்

மானின் மனதில் பயம்தான் இம்மியும்
இல்லா விட்டாலும்

மானின் மரணக் காரணம் அறிவாய்
இசையில் மயங்கியதே 1

விதவைப் பெண்ணும் அமர்வாள் அவளது
இறந்த கணவன்முன்

அவளது நெஞ்சம் சிதையினைக் கண்டு
அஞ்சுவ தும்இல்லை.

இந்த உடல்மேல் வைத்துப் பயத்தை
விட்டு விடுவாயே!2

---

1 நமது உடலைச் சார்ந்துள்ள உலகாயத இன்பங்களைத் தேடி அலைவதைக் காட்ட இவ்வுவமைகள் கூறப்பட்டன.

2 தனது இறந்த கணவனுடைய சிதையில் மனைவி சிறிதும் அஞ்சாமல் பாய்வது போல, உடல் மேல் நாம் கொண்டுள்ள அச்சத்தை விடவேண்டும்.

## 42. ஸுக் ஸாகர் மேன் ஐக்

மகிழ்ச்சிக் கடலை நீயடை யும்ஓர்
இறுதி வேளையிலே

தாக மாகச் செல்ல மாட்டாய்
அறிவாய் நீஐயா

அறிவிலி யோனே! சாவுனை எழுப்பத்
தூங்கு கின்றாயோ

உன்முன் உள்ளது புனித நீராம்
குடிப்பாய் மூச்சுவிட்டே;

கால்நடை யாகக் கானல் நீரினைத்
தேடி அலையாதே

அமுதைத் தேடிப் பருகும் ஆசையை
மனதில் கொண்டிடுவாய்

துருவனும் பிரகலா தனும்சுக தேவனும்
பருகிய நீரையா

இராய்தாஸ் என்னும் ஞானியும் சுவைத்துப்
பார்த்த நீர் ஐயா

அன்பால் பருகப் பட்டவர் ஞானியர்;
தாகமும் அன்பாகும்

கபீரன் சொல்வான், 'கேளாய் தம்பீ!
அச்சக் கூடினிமேல்

உடைந்து போனது பல்நெடும் பிறவி
உலகில் உனக்கில்லை

பொய்யுரை தன்னால் உனது நெசவைப்
புனைந்து கொள்ளுகிறாய்

உனது சொற்கள் முழுவதும் கள்ளம்
கபடம் நிறைந்தவையே

ஆசாபாசச் சுமையுன் தலையில்
ஏற்றிக் கொண்டாயே

எவ்வாறு உன்சுமை இறக்கி வைப்பாய்
கூறிடுவாய் ஐயா?

நிராசை தன்னை, அன்பை, உண்மையை
மனதில் காத்திடுவாய்!

## 43. பக்தி கா மார்க ஜினா ரே

பக்தியின் பாதையை விளக்க ஒண்ணாது
கேட்பதும் கேளாததும் அங்கு இல்லை
அவனது பாதம் அடைந்திடும் ஒருவர்
தன்னலம் தன்னைப் பேணுவ தில்லை
தேடும் மகிழ்ச்சியில் ஒருவன் மூழ்கினால்
நீரில் மூழ்கிடும் மீனினைப் போல
ஆழ்ந்த அன்பில் மூழ்கிட வேண்டும்
தலைவன் பணியில் ஈடு படுவோன்
தலையினை வணங்கத் தாமதம் செய்யான்
அவனது அன்பின் ஆழம் தன்னை
காசியில் வாழும் கபீரன் சொன்னான்;

## 44. மோஹி பைராக் பயெள

வாழ்வுப் பயண முடிவின் நினைப்பு
உலகப் பற்றினை விடச்சொல் கின்றது
மேலும், கீழும் பெருவெளி ஆகும்
பத்துத் திசையும் அதுவே அன்றோ?

இறைவன் என்பவன் என்றும் நிலைத்தவன்
மகிழ்ச்சியின் மூலப் பொருளும் அவனே
பானை உடையினும் பெருவெளி நிலையாம்
ஐந்து சேர்க்கையால் ஆனது உடம்பு.

ஆனால் அவற்றின் தோற்றம் எங்கு?
ஆன்மா செயலில் அடங்கியது என்பீர்
ஆனால் அதனை இயக்குவோன் யாரே?
ஆக்கை* உள்ளது ஆண்டவன் உள்ளே;

ஆண்டவன் உள்ளதோ ஆக்கையின் உள்ளே
எங்கும் எதிலும் அவனே உள்ளான்
கபீரன் சொல்வான் எதுவந் தாலும்
எளிதில் அவன்°பெயர் விட்டிடான் என்றே.

* உடம்பு
° இறைவன்.

## 45. தீரத் மேன் தோ ஸப் பானி ஹை

தீர்த்த யாத்திரை செல்லும் இடங்களில்
உள்ளது வெறும்நீரே;

நானறி வேனதில் குளிப்பதில் பயனெது?
நானதில் குளித்தவன்தான்

சிலைகள் அனைத்தும் உயிர்அற் றவையே
நானும் அறிவேனே

உரக்கக் கூவி அவையிடம் பேசினும்
அவைதாம் பேசாவே !

புராணம் என்பதும், குரானும் வெற்றுச்
சொல்லின் அலங்காரம்

திரைகளைத் தள்ளிப் பார்த்து விட்டேன்நான்
உண்மை சொல்லுகிறேன்

அனுபவ மொழிகளைக் கபீரன் சொல்வான்
மற்றவை பொய்யாமே !

## 46. ஜஸா லோ நஹீன் தைஸா லோ

வியத்தகு உலகின் மறைபொருள் தன்னை
யாரெடுத் தியம்ப எளிதோ கூறீர்
இதுபோல், அதுபோல் அவனில்லை என்று
எவ்வாறு நான்தான் சொல்லிட முடியும்?
என்னுள் ஆண்டவன் இருக்கிறான் என்றால்
எங்கும் நிறைபொருள் சிரித்திடும் அன்றோ?
என்னுள் அண்டவன் இல்லையென் றாலோ,
பொய்யான தத்துவம் ஆகிடும் ஐயா
கண்ணால் கண்டு களித்திட முடியா
அகப்புற உலகுகள் அவன்படைக் கின்றான்
அறிவதும், அறியாப் பொருள் அவன் பாதம்!
காண்பதும், மறைதலும் இல்லாப் பொருள்அவன்
காணவும், காணவைக் காதவன் அவனை
யாரெனச் சொல்லிடச் சொல்லால் இயலுமோ ?

## 47. இஹீ தன் மேரௌ ஹரி கே நாவ்

என் முழுச் செல்வமும் அரியின் 1 பெயரால்
முடிந்து வைக்கும் அதிகாரம் எனதோ?
அரியெனும் நாமமே விளைநிலம், சோலை
நான்உன் அடிமை உன்பதம் பற்றுவேன்
அரியெனும் நாமமே செல்வமும், முதலும்
நான்கண்ட ஒருபொருள் நீயே ஐயா
உனையன்றி பிறரைநான் அறிந்திட மாட்டேன்
அரியெனும் நாமே சூழ்ந்திடும் சுற்றம்
அனைத்து உறுதியும் இறுதி வேளையில்
உற்ற துணையாய் ஆகிடும் ஐயா
வறியவன் தனக்கு அரிபெயர் ஊன்றுகோல்
கபீரன் சொல்வான் அரியின் பெயரே
இனியநல் பண்டம் உற்ற பசிக்கே,

1 ஹரி,

## 48. ஹம்சா கஹோ புராதண் பாக்

ஆன்மா வே ! நீ சொல்லிடு வாயே
உன்னுடைப் பழங்கதையை

எந்நில உலகில் இருந்து வந்தாய்
செல்லிடம் எதுகூறாய் ?

எங்கே சென்றுநீ இளைப்பாறு வாயோ,
எதைநீ தேடுகிறாய் ?

பயமும், கவலையும், சாவின் அச்சமும்
இல்லா இடத்திற்கே

ஆத்மா வே! நீ இப்பொழு தேனும்
எழுந்தெனைப் பின்தொடர்வாய்

வசந்த காலச் சோலை மலர்களின்
மணமதை 'என்னுடையோன்'

ஏந்திக் காற்றில் வருகிறான் ஐயா
இதயம் என்னுமோர்

இன்னிசை வண்டே! மணத்தில் குளிப்பாய்
வேறெதும் விரும்பாதே.

## 49. ஸகியோ ஹம் ஹூம் பாய் வாலாமாஸி

அன்பின் தோழீ! காதல் தலைவனைக்
காணத் துடிக்கின்றேன்

எந்தன் இளமை மலர்ந்து விட்டது;
அவனைப் பிரிகையிலே

பிரிவின் நோய்எனை வாட்டு கின்றது
அறிவுப் பசியாலே

ஒற்றைப் பாதையில் நோக்கமில் லாமல்
அலைந்து திரிந்தேனே

ஆனால் அறிந்தேன் அவனது செய்தி
அறிந்தேன் நான்தானே.

நானொரு கடிதம் அவனிடம் பெற்றேன்
அவனது கடிதத்தில்

சொல்ல முடியாச் செய்தியைக் கண்டதும்
சாதல் பயமில்லை.

'அன்பின் தோழீ! சாவிலாப் பரிசே
பெற்றேன் நான்'என்று

காசியில் வாழும் கபீரன் என்போன்
சொல்லுகி றானையா.

## 50 ஹரே தில் ப்ரேம் தகர் கா அந்த் ந பாயா

இதய (கமல) மே! 1

அன்பெனும் நகரின் அனைத்து மறைபொருள்
நீயும் அறியாயே
அறியாமை யோட நீயும் வந்தாய்
செல்வாய் அப்படியே.

ஆருயிர் நண்பா!

இந்த வாழ்க்கையில் நீயும் செய்த
செயலும் ஏதையா?
கற்கள் நிறைந்த தலைச்சுமை2 நீயும்
சுமக்கின் றாய்ஐயா;
யார்தான் உந்தன் தலைச்சுமை இறக்கி
வைக்கப் போகின்றார்?
உந்தன் நண்பன்3 நிற்பது மறுகரை
ஆனால் நீதானோ,
அவனை அடையும் மனமில் லாமல்
இருக்கின் றாய்இங்கே.

(வேறு)

படகும் உடைந்தது; இருந்த போதும்
கரையில் என்றும் அமர்ந்திருக் கின்றாய்
அடிப்படை நோக்கம் எதுவும் இன்றியே
அலைகளால் நீயும் அடிபடு கின்றாய்.
ஊழியன் கபீரன் சொல்கிறான் கேளாய்,
'ஊழி காலத்துன் நண்பன் யாரோ ?
தமியன் நீயே நண்பனும் இல்லை;
பயன்பெறும் காலம் கவலை அடைவாய்.'

---

1 மொழி பெயர்ப்பாளரின் உருவகம்
2 தீவினைகள்
3 இறைவன்

## 51. ககன் காடா கஹாரானிஸாதோ

ஓ, சாதுவே !

வானக் கடலில் முகிலின் கூட்டம்
கேளாய் அந்த அலைகளின் ஓசையை
மாற்றமொன் றில்லா மெல்லிசை யோடு
கிழக்கில் இருந்து பெருமழை வருகுது
உந்தன் நிலத்தின் எல்லைக் கற்களை,
வேலியைக் கட்டி விளைச்சலைக் காப்பாய்
இல்லா விட்டால் பயிர்கள் பாழாம்
மண்ணின் தன்மையைக் காப்பாய் ஐயா;
அன்புக் கொடிகளைப் படரச் செய்வாய்
இல்லா விட்டால் பயிர்கள் மூழ்கிடும்
விவேக முள்ள உழவன் அறுவடை
அனைத்தும் இல்லம் கொண்டு சேர்ப்பான்
களஞ்சியம் அனைத்தும் நிறைந்திடும் வீட்டில்
ஞானிகள், துறவியர் ஆகி யோரை
காப்பவன் 'அவனே' அறிந்திடு வாயே.

## 52, தேரா ஜனு ஏக் ஆத்ஹை கே:யீ

உந்தன் பக்தரை மாந்தரில் காண்பது
அரிதினும் அரிதே; காமக் குரோத,
லோப, மோகமாம் தீய குணங்களை
விட்டவன் அறிவான் விமலன் தன்னை
புகழ்மொழி எவையும் செவிமடுக் காமல்
இகழ்ச்சியும் புகழ்ச்சியும் விட்டவன் எவனோ
இரும்பையும், பொன்னையும் நிகராய்க் காண்பவன்
அவனே ஆண்டவன் திருஉரு ஆவான்
சத்துவ. ராஜச, தாமச குணங்கள்
அத்தனை யும்உன்° மாயை ஆகும்
துரிய வெளியினைக் காண்பவன் எவனோ
அவனே உந்தன் திருவடி அடைவான்
மனமெனும் கோயிலை மாண்புடன் கட்டி
மாதவன் என்னும் தெய்வம் நாட்டி
தவறும், செருக்கும் தரணியில் விட்டு
அவனை யார்தாம் வழிபடு வாரோ
அவரே பக்தர் என்பான் கபீரே.

° இறைவன்

## 53. கல் ஹம்ஸா வா தேஷ் ஜஹான்

இதய (கமல)மே !°

எனது இதயத்தைப் பரவசப் படுத்தும்
எந்தன் தலைவன் இருக்கும் ஊர்எது ?
நீர்இரைப் பதற்குக் கயிறு இன்றியே
அவனது தோண்டி அன்பால் நிறைந்தது.

அருவப் பொருளே !

வானில் முகில்கள் இல்லாத போதும்
மழைத்துளி மண்ணில் வீழு கின்றது
வாசல் படியில் அமர்ந்தி டாமல்
மழையில் நீயும் குளிப்பாய் ஐயா.
எல்லாப் பொருளிலும் அங்கே நிலவொளி
இருளெனும் பொருளே இம்மியும் இல்லை.
ஆயிரம் சூரியர் அங்கே இருக்க
சூரியன் ஒன்றினைப் புகழ்பவர் யாரே ?
வீணை இசைத்திடும் மெல்லிய இசையை;
கைகால் இன்றி நடனம் நடக்கும்.
விரல்கள் இன்றியே வீணை இசைக்கும்
காதுகள் இன்றியே கேட்கும் அவ்விசை
அவனே காதுகள்; கேட்பவன் அவனே.
கதவும் நன்றாய் மூடி உள்ளது
ஆனால் நறுமணம் கமழு கின்றது
யாரும்இந் நிகழ்ச்சியைக் கண்டவர் இல்லை
அறிவார் இதனை ஞானிகள் மட்டுமே.

---

மொழி பெயர்ப்பாளரின் உருவகம்.

## 54. மோ கோ கஹான் டூன்ரே பந்தே

ஊழியனே ! என்னை எங்கு தேடுகிறாய் ?
இதோபார் உந்தன் அருகில் இருக்கிறேன்
கோயிலில், மசூதியில் நானிருப்ப தில்லை
கபாவிலும், கைலாச இருப்பிடங் களிலும்
நானில்லை ஏனோ தேடீ அலைகிறாய்?
ஆசார, அனுட்டான யோக நிலையிலும்
துறவு நிலையிலும் நானிருப்ப தில்லை
உண்மையில் நீயெனைத் தேடு வாயெனில்
உடனே என்னைக் காணலாம் ஐயா
ஒருநொடி தனிலே கண்டிட லாமே
கபீரன் சொல்கிறான், சாதுவே ! கேளாய்
அனைவரின் மூச்சிலும் 'அவன்' உள் ளானே.

## 55. பாபா அப் ந பஸவூ யஜஹி காவ்

இவ்வூ ரினில்யான் வாழ்ந்திடும் நாள்கள்
நெடுநாள் அன்றுகாண்; யாக்கையின் தலைவன்
ஒவ்வொரு நொடியும் கேட்பான் கணக்கை
உடம்பே ஊராகும், சீவனே தலைவன்
உழவர் ஐவரும் வாழ்ந்திடும் ஊர்இது
கண்ணும், காதும், மூக்கும், நாக்கும்
இந்திரி யங்களும் பெரும்பெரும் பகைவர்
அறம்எனும் கடவுளின் தீர்ப்புநாள் அன்று
பொறுக்க இயலாத் துன்பமும் உண்டே
ஐந்து உழவரும் அங்கிருந்து ஓடுவார்
சீவன் மட்டுமே அன்றுஅகப் படுவான்
கபீரன் சொல்வான் ஜீவனைக் காக்கச்
சான்றோர் செலுத்துவார் இந்நிலத் தீர்வையை
உயிர்வாழ் உடலெனும் கடலில்
ஜீவனை மூழ்காது செய்திடு வீரே.

## 56. யுயே ஜோ தீஸே அம்பர் தாரே

வானத்தில் தோன்றும் விண்மீன்கள்
வரைந்த ஓவியன் யாரையா ?
பண்டித னே !நீ பகர்ந்திடுவாய்
வானத் திற்கெது ஆதாரம் ?
தெய்வீக ஞானி மட்டிலுமே
பகர்வான் அந்தத் தன்மையினை
சூரிய, சந்திரர் ஒளியாக
'அவனின்' ஒளியும் பரவிடுதே.

இவையே நிகரிலாப் பிரம்மத்தின்
உண்மை உரைக்கும் பொருளாகும்
கபீரன் சொல்வான் கேளீரே,
இறைவன் அருகுடை மனதினையே
பெற்றவர்; ஓயாது அவனுடைய
பெயரினை உரைக்கும் நாவினையே
பெற்றவர் மட்டுமே 'அவன்' புகழை
எடுத்து உரைக்க வல்லவரே.

## 57. தேஹி ஸாஹிப் கே லாகென ஸாதா

முழுமுதல் தலைவனைத் துணையாய்க் கொள்வீர்
இன்ப துன்பக் கடல்கடந் திடுவீர்
தசரதன் மைந்தன் அவனும் அல்லன்
இராவண வேந்தனைக் கொன்றவன் அல்லன்
தேவகி வயிற்றில் தோன்றிட வில்லை
யசோதை மடியில் வளர்ந்தவன் அல்லன்
ஆநிரை மேய்த்துத் திரிந்தவன் அல்லன்
வாமன வேடம் தரித்து வந்து
மாவலி யிடம்மண் கேட்டவன் அல்லன்
வேதமும், பூமியும் காத்தவன் அல்லன்
கண்டகி ஆற்றங் கரையில் உள்ள
சாளக் கிராமத்தில் வளர்ந்தவன் அல்லன்
ஆமையும், மீனும் அல்லவே அல்லன்
பத்ரியில் தியானம் செய்தவன் அல்லன்
மன்னரை அழித்த பரசனும் அல்லன்
துவாரகை நகரில் மறைந்தவன் அல்லன்
பூரியில் இருக்கும் உருவமும் அல்லன்
அனைத்துக் கதைகளும் பொய்யே கேளீர்
நன்றாய் ஆய்ந்தே கபீரன் சொல்கிறான்
'இவைகளில் இருந்து நீங்கிய ஒருவனே
வையகம் தன்னைக் காக்கிறான்' என்றே.

## 58. ஆஜ் தின் கே மைன் ஜாவூன் பலிஹாரி

''என்னாள் விடவும் நன்னாள் இந்நாள்
காரணம் அதனைக் கூறக் கேளீர்
அன்பிற்கு உரிய அரும்பெரும் தலைவன்
விருந்தினன் ஆகஎன் இல்லம் வந்தான்
எந்தன் இருப்பிடம், அவைக்களம் அனைத்தும்
எந்தன் தலைவன் அமர்ந்த தாலே
பேரழ குற்றுப் பெருமை பெற்றன.
எந்தன் ஆவலும் அவன்புகழ் பாடும்
'அவனது' அழகாம் மாட்சி தன்னால்
ஆசைகள் அனைத்தும் அவிந்து போகும்
நீராட்டு வித்தேன் அவனது பாதம்
அன்னாந்து பார்த்தேன் அவனது முகத்தை
உடல்பொருள், ஆவி உள்ளம் அனைத்தும்
அவன்முன் வீழ்த்தி அர்ப்பணித் திட்டேன்
அன்பிற் குரியஎன் அரும்பெரும் செல்வன்
இல்லம் வந்தஇந் நாளினைப் போல
மகிழ்ச்சியைக் கொடுக்கும் நாளொன் றில்லை
எந்தன் தலைவனைக் கண்ட வுடனே
எனது இதய மாசுகள் மறைத்தன
எந்தன் அன்பு அவனைத் தொட்டது;
உண்மைப் பொருளின் பெயரினை அறிய
எந்தன் இதயம் ஏங்கு கின்றது''
இவ்வாறு பாடுவான் கபீரன் என்னும்
காசியில் வாழும் சேணியன் தானே.

## 59. ஓம்கர் ஸிவாய் கோயீ ஸிர்ஜாய்

ஓமில் இருந்தே அனைத்துப் பொருள்களும்
தோன்றின; அவன் உடலும்

அன்பின் வடிவம் ஆகிடும் ஐயா
நிறம்உரு அழிவில்லான்

சமத்துவம் அவனுள் தேடுவாய் ஐயா
உருவமிலா இறைவன்

உயிர்கள் பிறவாய், ஆயிரம் உருவாய்
தோன்று கின்றவனாம்.

தூயவன் அவனே அழிவில் லாதோன்
முடியாத அவனுருவம்

ஆழ்ந்த தன்மையும் உடையது ஐயா
மகிழ்வாய் ஆடுகிறான்

ஆடிடும் ஆட்டம் தன்னில் இருந்து
உருவலைகள் தோன்றும்

உடலும், மனமும் அவனது மகிழ்வில்
ஆழ்ந்து இலயித்திருக்க

உடலும் மனதிற்கு அடிமையாய் என்றும்
ஆகி விடாதையா

மகிழ்வில், கவலையில் அறியும் செயலில்
ஆழ்ந்து அமிந்துள்ளான்

ஆதியும், அந்தமும் அவன்பெறான் ஐயா
இன்ப உருவானான்.

## 60. பூஜா பந்த் பிலா கர் தரியோ

*கைகால் கட்டிக் குவிய லாகத்
தூக்கி எறியப் பட்டு விட்டேன்
யானையின் பிடரியில் அமர்ந்த பாகன்
வெறியுடன் அதனை முடுக்கி விட்டான்
அதிசயக் காட்சி இதற்கு நானும்
பலிப்பொருள் ஆகிட இருந்தேன் ஐயா
மேலாம் பொருளே என்பலம் நீயே.
''பாகனே உந்தன் தலையைக் கொய்வேன்
யானையை விரட்டு'' என்றே காஜி
யானையை விரட்டப் பாகனைத் தூண்டினான்
இறைவனின் மீது கொண்ட தியானமே
யானையை இம்மியும் நகர்த்திட வில்லை
யானையின் உடம்பில் இறைவன் இருந்திட
யானையும் தனக்குள் எண்ணிப் பார்த்தது,
''புனித, இம் மனிதன் தவறெது செய்தான்
மிதித்திடும் பொருட்டாய்; தூக்கிப் போட்டிடக்
காரணம் என்ன?'' என்றே நினைத்து
யானையும் தன்முன் இருந்த என்னைப்
பலமுறை வணக்கம் செய்து நின்றது
யானையின் செயலால், கெட்ட மனத்துக்
காஜியும் மாறவில்லை; மூன்றாம் முறைஇச்
சோதனை நடந்தும் காஜியின் இதயக்
கல்லும் உருகவில்லை. கபீரன் சொல்கிறான்,
'ஆண்டவ னேஎன் பாது காவலன்;
அவனது அடியவர் வாழ்க்கை இருப்பது
நான்காம் நிலையாம் அறிந்திடு வீரே.'

*கபீருக்கு ஏற்பட்ட ஒரு சோதனையை இப்பாடல் கூறுகிறது. தில்லி பாதுஷா சிக்கந்தர்ஷா இது போன்று 52 முறை கபீரை சோதித்தாகக் கூறப் படுகிறது. பிரகலாதன், திருநாவுக்கரசர் ஆகிய வர்களும் இவ்வாறு சோதிக்கப்பட்டதாக அறிகிறோம்.

## 61, 'கோடின் பானு சந்த்ர தாரங்கள்'

என்னுடை வேந்தன் குடைநிழல் கீழே
கோடிக் கணக்காய் சூரிய சந்திர,
விண்மீன் ஒளியினை வீசு கின்றன
எந்தன் மனத்துள் மனமாய் உள்ளான்
எந்தன் கண்ணுள் மணியாய் உள்ளான்
அம்மா!° எந்தன் மனமும், கண்களும்
ஒரு பொருள் கொண்டதோ அன்றி பலவோ ?
எந்தன் அன்புதான் அவனை அடையுமோ ?
விரகதா பத்தால் ஏங்கும்என் இதயம்
குளிர்ச்சி அடைந்திட முடிந்திடு மோதான் !
காசியில் வாழும் கபீரன் சொல்கிறான்,
'அன்ப னிடம்உனை இணைத்துக் கொண்டால்
பிறகே அன்பின் முழுமை காண்பாயே'

° வியப்பிடைச் சொல்.

## 62. 'நிர்குண் ஆகே ஸர்குண் நகாய்'

கட்டுப் பட்ட அடிமையின் முன்போர்
கட்டுப் படாதவன் ஆடு கின்றான்
'நீயும் நானும் ஒன்றிவிட் டோமென'*
மங்கள இசையும் முழங்கு கின்றது

ஆசா ரியனும் வருகை புரிந்து
மாணவன் முன்தலை வணங்கு கின்றான்
கபீரன் செகல்கிறான் கேளீர் ஐயா,
,வியப்பினில் வியப்பு இதனினும் உண்டோ?

---

* ஜீவாத்மாவும் பரமாத்மாவும் கலப்பது.

## 63. ஜான் ஸேத் அஸெத் கம்ப் தோவ்

கனவு நினைவு எனும்இரு துருவம்
இரண்டின் இடையில் மனம்இணைந் துள்ளது
அண்டங்கள் அதிலுள்ள உயிர்கள் அனைத்தும்
அவ்விடத் திருந்தே ஊச லாடிடும்
ஊசல் என்றுமே அறுந்து விழாதது
கோடானு கோடி உயிர்அதில் வாழும்
சந்திர சூரியர் சுழல்கிறார் அங்கே
கோடிக் கணக்காய் ஆண்டுகள் ஓடும்
ஊச லாட்டமும் செல்லு கின்றது
விண்வெளி, பூமி, காற்றுடன், நீரும்
ஆண்டவ னேஇப் பொருளாய் ஆகிய
காட்சியைக் கண்டே கபீரன் தானும்
அடிமை யாகவே ஆகிவிட் டானே !

## 64. லோ கா தும் ஜ கஹத் ஹௌ

மனித குலத்தீர்! நந்தகோ பன்மகன்
கிருஷ்ணன் என்பீர்; ஆனால் நந்தன்
யாரது பிள்ளை? வானமும், பூமியும்
தோன்றாத போது நந்தகோ பன்தான்
எங்கே இருந்தான்? என்பத்து நான்கு
இலட்சம் பிறவிகள் பிறந்திளைத் தான்அவன்;
பரமனின் பிறப்புக்குப் பக்தியே காரணம்
கண்ணனைப் பெற்றதால் நந்தனும் உயர்ந்தான்
கபீரின் கடவுள் யார்எனக் கேட்பின்
பிறப்பு இறப்பினைப் பெறாத ஒருவன்
கவலையும், துன்பமும், உருவமும் இல்லான்
அன்னையும் பிதாவும் அவனியில் இல்லான்
உருவம் அற்றவன் ஆண்டவன் அவனே!

## 65. ஸாதோ ஸஹஜ் ஸமாத் பாயீ

கேளாய் சாதுவே, எளிய பக்தியே°
சிறந்தது ஐயா
எந்தன் தலைவனைப் பார்த்த முதல்நாள்
அன்பின் ஆடலுக்கு
எல்லை என்பதே இல்லை ஐயா
கண்களும், காதுகளும்
மூடவும் இல்லை; உடலையும் வருத்தவில்லை
புன்சிரிப் புடனே,

கண்களைத் திறந்து பார்க்கிறேன் எங்கும்
அவனது அழகினையே
எதைப்பார்த் தாலும் அவன்பெயர் சொல்வேன்
நினைவும் அவன்மேலே
எதுநான் செய்யினும் அதுவே அவனை
வணங்கும் செயலாகும்
உதயமும், மறைவும் எனக்கொன் றாகும்
தடைகளும் நீங்கி டுமே.

நான்எங்கு செல்லினும் அவனை நானும்
வலம்வரு கின்றேனே
நான்செய் பணிகள் அனைத்தும் அவனது
பணியாய் ஆகிடுமே
கீழே நானும் வீழ்ந்திடும் போது
அவன்கா லில்விழுவேன்
பூசனை செய்யத் தக்கவன் அவனே
வேறெவரும் இல்லை.

---

° சகஜ யோக்

தூய்மை இல்லாச் சொற்களை விட்டு
என்நாவும் பாடும்
இரவும், பகலும் அவனது புகழினையே!
அமர்ந்தால் எழுந்தாலும்
அவனை மறவேன்; அவனது தாளக்
கதியின் நல்லிசையும்
எந்தன் காதில் கேட்கின் றதுவே
கபீரன் சொல்லுகிறான்,

எந்தன் இதயம் பித்தம் கொண்டது;
ஆன்மா விற்குள்ளே
மறைத்து வைத்த அரும்பொருள் தன்னை
நானும் திறந்துவைத்தேன்
அனைத்து இன்ப, துன்பங் களையும்
மிஞ்சும் ஒருபொருளாம்
அந்த ஒன்றின் பேரின் பத்தில்
ஆழ்ந்து விட்டேனே!

## 66. நைஹர் ஸே ஜியாரே பாட் ரே

அன்பனின் இருப்பிடம் எதுவெனத் தேடியென்
இதயக் (கமல)ம்° அலறு கின்றது
கணவனை இழந்த கைம்பெண் ணிற்குத்
திறந்த வெளியில் அமைந்த பாதை
கூரையின் நிழலிடம் அனைத்தும் சொந்தம்
எதனையும் என்மனம் விரும்பிட வில்லை;
என்மனம் என்பது கலக்கம் இல்லாதது
அவனது அரண்மனை பலவாயில் உள்ளது
அதற்கும் எனக்கும் இடைப்பட்ட தூரம்ஓர்
நீள்கடல் ஆக நீண்டு கிடத்திடும்
நண்பரே! கேளீர் கடந்திடும் பாதை
எல்லைஇல் லாத நீள்தொலைத் தூரமாம்.
நுண்கலை நுணுக்கம் அமைந்தஇவ் வீணை
வியப்பினும் வியப்பாய் அமைந்தது ஐயா
தந்திகள் நன்றாய் மீட்டிடும் போது
இதயக் (கமலம்)° மயங்கு கின்றது
தந்திச் சாவிகள் உடைந்து போனால்
தந்திகள் அனைத்தும் தளர்ந்து போனால்
வீணையை யாரும் விரும்பார் ஐயா
புன்னகை தவழும் முகத்தி னோடு
காலையம் பொழுதில் தலைவனைத் தேடிச்
செல்லும் செய்தியைப் பெற்றோ ரிடம்சொல,

''கணவனின் கட்டுப் பாட்டினை மீறி
இறைவனின் இல்லம் அடைந்து விட்டதாய்
மனதினில் அவளும் நினைக்கின் றாளே
அதனது காரணம் அவளது கலக்கமென்று''
என்மேல் கோபம் கொண்டு சொல்கிறார்
அவளை அடைந்திடும் இரவிது அதனால்
என்முகத் திரையை அகற்றுவீர் ஐயா
கபீரன் சொல்வான் என்சொல் கேளீர்
இதயக் கமலம் அவனை அடைந்திட
விரும்பு கின்றது ; படுக்கை தன்னில்
உறக்கம் இன்றியே கழித்திடு கின்றேன்
காலையம் பொழுதிலும் நினைப்பாய், என்றே.

---

மொழிபெயர்ப்பாளரின் உருவகம்.

## 67. நாரத் ப்யார் ஸோ அந்தர் நாஹி

ஓ நாரதனே!

எந்தன் காதலன் தொலைவினில் இல்லை
நானும் அறிவேனே

காதலன் விழிக்கையில் விழித்த நானும்
உறங்கிடச் செல்லுகிறேன்

எவர்என் தலைவனுக்கு இடையூறு செய்யினும்
அழிக்கப் படுவாரே

அறிவீர் ஐயா வேரிலும் அவனேதான்.
அவனைப் புகழ்ந்து

பாடும் பொழுது நானும் வாழ்வேன்
அவனும் அசைந்தால்

நானும் நடப்பேன் அவனின் முன்பாய்
அவனுக் காகவே!

என்னுடை இதயம் உருகு கின்றது
அழிவே இல்லாப்

புனிதக் கோயில் அவனது பாதம்
அங்கே அமர்வோர்

இட்சக் கணக்காய் பக்தர் ஆவார்
காசியில் வாழும்

கபீரன் சொல்வான் கேளீர் ஐயா
உண்மை அன்பின்

பெருமை அனைத்தும் அவனி முழுவதும்
உரைப்பவ னும்அவனே!

## 68. கபீர் கப் ஸே பயே வைராஹி

கோரக் நாதர் கபீரைக் கேட்கிறார்
''கபீரே! எனக்குக் கூறுவீர் ஐயா
எப்போது உங்கள் தொழிலைத் தொடங்கினீர்?
உங்கள் அன்பு எங்கிருந்து எழுந்தது?
காசியில் வாழும் கபீரன் சொல்வான்
''பாத்தி ரங்களைப் படைப்போன் ° தனது
கூத்தினைத் தொடங்கிய பொழுதே தொடங்கினேன்
குருவும் சீடனும் இல்லாப் பொழுது,
உலகம் இதுவும் தோன்றாப் பொழுது
ஒருவன் மட்டுமே இருந்த பொழுது
எளிய சீடனாய் யானும் ஆகினேன்
கோரக் நாதரே! அதற்குப் பிறகே
பிரம்மத் திடம்என் அன்பு சென்றது
யோகம் நானும் கற்றகா லத்தில்
பிரம்மனின் தலையில் மணிமுடி இல்லை;
விஷ்ணுவுக்கு இல்லை மகுடாபி சேகம்
சிவனது ஆற்றல் அதுவரை இல்லை
கணப்பொழு தில்நான் காசியில் தோன்றினேன்
இராமா னந்தரால் அறிவொளி பெற்றேன்
நிலையாம் பொருளை அறியும் தாகம்
தன்னை என்னுடன் கொண்டு வந்தேன்
அவனுடன்° இணையவே நானும் வந்தேன்
எளிய வழியில்* எளியோன் அவனுடன்
இணைவேன்: எனது அன்பு அளவற்றது
கோரக் நாதரே! நடப்பீர் ஐயா
அவனது° இசையின் தாள கதிக்கே.

° தன்னிகர் இல்லாதவன்
* சகஜ யோகம்.

## 69. நிஸ் தீன் சாலை காவ்

புரையோ டியஒரு புண்ணும் என்னை
இரவு பகலாய் அழச்செய் கின்றது
தூங்கவும் என்னால் முடிய வில்லை
அன்புடை யவனை நானும் அடைய
விரும்பு கின்றேன்: தந்தையின் இல்லம்
இனியும் அமைதியைத் தந்தி டாது
வானின் வாசல் திறந்து கொண்டது
கோயிலும் அங்கே தென்படு கின்றது
எந்தன் கணவன் கால்களில் விழுந்தென்
உள்ளமும், உடலும் அர்ப்பணிப் பேனே.

## 70. மோஹி தோஹி லாகீ கைஸே சூடே

உனக்கும் எனக்கும் இடையில் இருக்கும்
அன்பின் மிகுதி எவ்வாறு நீங்கிடும் ?
தாமரை இலையும் நீரிலே வசிக்கும்
நீயென் தலைவன் நானுன் பணியாள்
சகோரம் என்னும் இரவுப் பறவை
நிலவைப் பார்த்தே ஏங்கு கின்றதால்
நீயென் தலைவன் நானுன் பணியாள்
ஆதி யின்முதல் அந்தம் வரைக்கும்
உனக்கும் எனக்கும் அன்புமிக் குள்ளது
இவ்வகை அன்பு எவ்வாறு அழிந்திடும்?
காசியில் வாழும் கபீரன் சொல்வான்
கடலில் இணையும் ஆற்றினைப் போல
எனது இதயம் உன்னைத் தொட்டதே.

## 71. ஸாத் ஸங்கத் பீடம்

அன்புடை யோனின் இடமாய் உள்ள
சான்றோர் கூட்டம் தன்னில் நீயும்
கலந்து கொள்ளச் செல்வாய் ஐயா
எண்ணக் குவியல், அன்பின் அறவுரை
அனைத்தும் கற்பாய் அங்கிருந் தேநீ.
அவனது நாமம் சொல்லாக் கூட்டம்
சாம்பல் ஆகிப் போகக் கடவது
மணமகன் இல்லா மணவீடு தன்னில்
விருந்தும் எது? சொல்வாய் ஐயா
அன்பனை நினைப்பாய்; உறுதி அற்றவன்
இனியும் வாழ்வது உலகினில் இல்லை
உந்தன் மனதால் வேறு கடவுளை
வணங்குதல் செய்யாதே; வேறு குருக்களை
வணக்கம் செய்வதில் பயனொன்றும் இல்லை
கபீரன் சொல்வான் பிறரை வணங்கினால்
அன்பனைக் காண்பது அரிதாம் ஐயா.

## 72. மாம் காஸே பூசாஹீன்

எந்தன் தலைவனைப் பற்றி அறிந்திட
யாரிடம் நானும் சென்றிடு வேனோ?
மரத்தை நீயும் அசட்டை செய்தால்
காட்டில் சென்று காணவும் மாட்டாய்
பராக்குப் பார்த்துத் தேடிச் சென்றால்
அவன்உன் கண்ணில் என்றும் காணான்.

## 73. ஹரி நாவ் ந ஜப்ஸி கம்வாரா

அறிவிலி யே !நீ அரியின் நாமம்
இயம்பிட மாட்டாயோ?
அடிக்கடி நீயும் எதனை நினைத்துக்
கவலைப் படுகி ன்றாய்?

திருடர் ஐவரும்1 கோட்டையின் பொருளைக்
கவர்வார் இராப்பகலாய்
கோட்டையின் தலைவர்2 கண்கா ணித்திடில்
களவுகள் நேராதே

விளக்கின்3 தேவை இருட்டினில் பொருளைத்4
தேடிடவே ஐயா
களங்க மில்லாக் காட்சியைக் கண்டோர்
கையில் விளக் கெதற்கு?

ஆடியில் உன்உருக் காண வேண்டுமேல்
ஆடியைத் துடைத்திடுவாய்
ஆடியில் அழுக்கு நிறைந்திருந் தால்,உருக்
காண்பது எங்ங னமோ?

எளிதில் இறைவன் கிடைப்பது அரிதெனில்
நூல்களின் சிந்தனையும்,
வேத புராணச் சாத்திரம் கேட்டலின்
பயனெது? கூறிடுவீர்,

---

1 பஞ்சேந்திரியம்
2 மனம்
3 பரமாத்மா
4 ஞானஒளி

## 74. நா ஜானா ஸாஹப் கைஸே ஹை

எந்தன் கடவுள் எப்படி உள்ளான்
என்று நானும் அறிந்திட வில்லை

கடவுளை நோக்கி முல்லா உரக்கக்
கத்துவ தும்ஏன் கடவுள் செவிடோ?

சிற்றுயிர் நகரும் ஓசை கூட
கடவுளை உணர்த்தும்; சிற்றுயிர் காலில்

குத்தும் சலங்கை கட்டி வைக்கின்றாய்,
ஜபத்தைச் செய்கிறாய்; உந்தன் நெற்றியில்

கடவுள் சின்னம் பூசிக் கொள்கிறாய்;
தோல்விரிப் பதனால் செய்த ஆடையைப்

பகட்டாய் அணிகிறாய்; ஆனால் கேளாய்
கூரிய அம்பும் உன்இத யத்தைக்

குத்தி இருக்கையிலே, இறைவனை எந்த
வழியில் நீயும் அடைந்திடு வாய்ஐயா.

## 75. அவதூ பூலே கோ கர் லாவே

அலைந்து திரியும் அறிவிலி ஒருவனை
அவனது வீட்டில் மீண்டும் சேர்க்கும்
ஒருவனே எனக்கு நெருங்கிய நண்பன்
இல்லறம் ஒன்றே உண்மை உறவிடம்
வீடே வாழ்வில் மகிழ்ச்சியின் இருப்பிடம்
வீட்டை விட்டுஏன் காடுசென்று அலைவேன்?
உண்மையை உணர பிரம்மம் உதவினால்
பந்த பாசமாம் இரண்டின் தன்மையை
வீட்டில் இருந்தே நான்உணர்ந் தறிவேன்
துறவும், உறவும் இணைந்திடும் நிலையில்
முடிவிலா இசையை இசைத்திட இயல்வோன்
பிரம்மத்தில் வீழ்ந்து மூழ்கிடும் ஆற்றலைப்
பெற்ற ஒருவனே எந்தன் அன்பன்
கபீரன் சொல்வான், இல்லற வாழ்வே:
நிலைத்த வாழ்வாம்: இயற்கையும் அதுவே
இயற்கையாம் அவனை அடையச் செய்வதும்
இல்லறம் ஆகும்; இருக்கும் இடத்தில்நீ
இருந்து கொண்டால் அனைத்துப் பொருளும்
காலம் கனிந்திடில் உனைவந் தடையுமே!

## 76. ஜான் கிலாத் வஸந்த் ரிதுராஜ்

வசந்தத் தலைவன் தோன்றிய இடத்தில்
இயக்கப் படாமணி ஒலிக்கும் அங்கு
ஒளியின் ஊற்றுப் பரவிடும் எங்கும்
சிற்சில பேரே செல்வார் அங்கு
கண்ணன்கள் நிற்பார் இலட்சக் கணக்காய்
குவிந்த கைகளோடு இருப்பார்; அங்கு
பிரம்மர்கள் நிற்பார் இலட்சக் கணக்காய்
வேதம் இசைத்தே நிற்பார்; அங்கு
இந்திரர் நிற்பார் இலட்சக் கணக்காய்
வான வெளியில் நிற்பார்; அங்கு
மனிதக் கடவுளர், முனிவர் எண்ணிலார்
இசையின் இறைவி கலைமகள் அங்கு
வீணையின் இசையை இனிதாய் இசைப்பாள்
தன்னையே எனக்குக் காட்டிடும் தலைவன்
அங்கே இருப்பான் அறிவீர்; அங்கு
சந்தன மணத்துடன் மலர்மணம் உண்டே.

## 77. அங்கடியா தேவா

படைப்போர் இலாப்பரம் பொருளே! கேளாய்
யார்தான் உனக்குப் பணிவிடை செய்வார்?
ஒவ்வொரு மனிதரும் தானே படைத்த
தெய்வங் களையே வணங்கு கின்றார்!
ஒவ்வொரு நாளும் சேவையை ஏற்கிறார்
பிரம்மம் என்பது பிரிக்க ஒண்ணாதது
உண்மையில் யாரும் அறிந்தவர் இல்லை;
அவர்கள் நம்புவார் தசாவ தாரம்
ஒருவனின் தேவையைத் தீர்த்திடக் கூடிய
ஆற்றலை அவதாரம் பெற்றிட வில்லை.
ஒப்புயர் வற்ற பொருளில் இருந்து
வேறு பட்ட பொருளாம் பிறவே.
சன்னியா சிகளும், யோகியர் தாமும்,
துறவியர் கோலம் கொண்டு திரிவோர்
ஒருவவரோ டொருவர் போராடு கின்றார்
கபீரன் சொல்வான், 'தம்பீ! அந்த
அன்பின் ஆற்றலை அறிந்தவன் அவனே
ஆண்டவன் அடைக்கலம் பெறுவான் என்றே!'

## 78. ஸாதோ ஸோ ஸத்குரு மோஹி பாவை

உண்மை அன்பினைக் கோப்பையில் நிரப்பித்
தானும் உண்டு, எனக்குத் தந்த
உண்மைக் குருவை எந்தன் இதயம்
விரும்பு கின்றது அறிவாய் ஐயா!
கண்ணில் இருக்கும் திரையை அகற்றிப்
பிரம்ம தரிசனம் காட்டினான் அவனே
அண்டங்கள் அனைத்தும் தன்னுள் அடக்கி,
அசைக்கப் படாத மணியின் இசைஎன்
காதால் கேட்கச் செய்தவன் அவனே!
இன்பமும், துன்பமும் ஒன்றாய்க் காட்டுவான்
அன்பு மொழியாய் அனைத்திலும் இருப்பான்
காசியில் வாழும் கபீரன் சொல்கிறான்,
'பாதுகாப் பான இடத்திற்கு அழைத்துச்
செல்லும் குருவினைப் பின் தொடர் பவனே
அச்சத்தை அறவே விட்டவன் ஆவான்!'

## 79. மத்ய ஆகாஷ் ஆப் ஜஹான் பைதே

ஆன்மா வாழும் அற்புத உலகம்
ஆகாய வெளியின் நடுஇடம் அதுதான்
இனிய இசையை வீசுகின்றது
தூய இசையெனும் மலர்நிறை இடத்தில்
எந்தன் தலைவன் மகிழ்வாய் உள்ளான்
அவனது உடலின் புதுமை யாகிய
பேரொளி வீசும் ஒவ்வொரு மயிரும்
வீசிடும் ஒளிக்கு இலட்சக் கணக்காய்ச்
சூரிய சந்திரர் சேர்ந்த ஒளியும்
பெறுவது இல்லை அறிந்திடு வீரே !
அமுத மழையை ஓயாது பொழிந்து
என்றும் வற்றா நீரின் அக்கரையில்
அழகிய நகரம் இருக்கின்றதையா
கபீரன் சொல்கிறான், 'கேளாய், தர்மதாஸ் !
எந்தன் தலைவனின் பேரவை காண்பாய்.'

## 80. ஹம் கர் ஸாட் தனேஹ் நித் தனா

எந்தன் தலைவன் தன்னைத் தானே
மறைத்துக் கொண்டு
வியப்பான வழியில் தன்னைத் தானே
காட்டு கின் றானே.

எந்தன் தலைவன் என்னை நன்றாய்
சூழ்ந்து இருக்கின்றான்
எந்தன் அடிமை விலங்குகள் அனைத்தும்
வீழ்ந்திடச் செய்துவிட்டான்.

இன்ப துன்பச் சொற்களை என்னிடம்
கொண்டு தருகின்றான்
அந்தப் போரில் விளையும் விழுப்புண்
தானே ஏற் கின்றான்,

எந்தன் உடலும் உள்ளமும் அவனுக்கு
அன்பாய் அளித்திடுவேன்
என்றும் மறவேன் அவனை; எந்தன்
வாழ்வும் அவனுக்கே !

## 81, கண்ட் ஜனேவு தும்ஹாரா

பருத்தியில் இருந்து நூற்ற நூலும்
நமது வீட்டில் உள்ளது அறிவோம்
இருப்பினும் அதனைப் பூணூல் ஆகஉன்
கழுத்தைச் சுற்றி அணிவாய், நீயொரு
பிராமணன் ஐயா; வாயால் மட்டுமே
வேத காயத்ரி மந்திரங் களைநீ
சொல்லிடும் பொழுது எங்களைப் போன்ற
பாமர மக்களின் இதயம் தன்னில்
கோவிந்தன் என்பவன் வாழ்கிறான் ஐயா;
விஷ்ணு எந்தன் நாவில் வாழ்கிறான்;
நாரா யணன்என் கண்ணில் வாழ்கிறான்;
கோவிந்தன் எந்தன் இதயத்தில் வாழ்கிறான்;
'முகுந்தா' என்பாய்; ஏமாற் றாதே
எமலோ கத்தின் வாசலில் நின்று
என்ன பதிலைக் கூறப் போகிறாய்?
நாங்கள் அனைவரும் ஆட்டு மந்தைகள்
பிராமணன் நீயே மந்தைகள் காக்கப்
பரம்பரை யாய்வரும் இடையன் ஆவாய்
எப்படிப் பட்ட இடையன், நீ ஐயா?
வரிசைப் படுத்தி எங்களை நீயும்
வாழ வைக்கத் தவறியும் விட்டாய்
நீயொரு பிராமணன்; காசியில் வாழும்
இழிகுலம் பிறந்த சேணியன் நானே!
நான்பற்றி இருக்கும் விவேகம் அறிவாய்
ஆண்டையர், அரசர்கள் வாசலில் நின்று
யாசகம் கேட்டு நிற்கின் றாயே
எனது ஆன்மாவே அரிபெயர் பாடுமே!

## 82. கஹா பண்டித் ஸுசா கவன் டாவூ

பண்டித னே! நீ இயம்பிடு வாயே
எவ்விடம் தூய இடமெனக் காட்டு.
பந்தியில் அமர்ந்து உணவு உண்டிட
பண்டித னே! நீ இடமெது காட்டு.

தாயும் தந்தையும் தூய்மை அற்றோரே
தவழ்ந்திடும் குழந்தையும் தூய்மை அற்றதே
வந்திடு வோரும், சென்றிடு வோரும்,
இறந்திடு வோரும் தூய்மை அற்றோரே

உணவைச் சமைக்கும் நீரும், இடமும்
சுடுகின்ற தீயும் தூய்மை அற்றவை
உணவைப் படைக்கும், தட்டும் உணவும்,
உண்ணுகின் றவரும் தூய்மை அற்றவர்.

பசுவின் சாணமும் தூய்மை அற்றது
வீட்டின் முற்றமும் தூய்மை அற்றது
துன்பம் போக்கித் தூய்மையால் ஆக்கும்
அரியின் பெயரைச் சொல்பவர் தூயோர்.

## 83. ஸூர் பர்காஸ் தன்ங் ரைன் கஹான் பாயே

சூரியன் இருக்கும் போது
இரவுக்கு என்ன வேலை ?
காரிருள் இரவின் காலம்
கதிரவன் மறைந்து போவான்
அறிவிங்கு நிறைந்தி ருக்க
அறியாமைக் கென்ன வேலை ?
அறியாமை நிறைந்தி ருக்கும்
இடத்தினில் அறிவென் செய்யும் ?

சபலங்கள் நிறைந்தி ருக்க
அன்பினுக் கிடமங் கேது ?
அன்பங்கு இருக்கும் போது
சபலங்கள் சாய்ந்து போகும்
வாளினைக் கையில் ஏந்திக்
களம்தனைக் காண்பாய் ஐயா!
வாழும்நாள் முழுதும் நீயே
களம்தங்கிப் போர்செய் வாயே!

பகைவனின் தலையைச் சீவி
அவனுக்கோர் முடிவு காண்பாய்
வாகைநீ சூடி வந்து
தலைவனை வணங்கு வாயே
வீரனாய் இருப்போன் செந்நீர்ப்
போர்க்களம் அஞ்சான் ஐயா
போரினைப் புறக்க ணிப்போன்
பேடியாய்ப் போவான் அன்றோ ?

உடலெனும் மண்ணின் மீது
நாளுமே போர்ந டக்கும்;
துன்பமே, கோபம், கர்வம்,
ஆசையை அழித்தல் வேண்டி
வாய்மை, தூய்மை, நிறைவெனும்
ஆட்சி இங்கு நடப்பதைச்
சாய்த்திடும் எண்ணத் தோடு
கொந்த ளிப்பும் ஆகுதே.

பகைவரை அழிப்ப தற்கு
வாள்எது2 கேட்பாய் ஐயா
மிகைப்படக் கூறு கின்ற
'அரி'யெனும் பேரே வாளாம்!
கபீரன் சொல்வான் கேள்நீ
வீரனும் களம்பு குந்தால்
குபீரென் றோடும் சேனை
அவரே கோழைக் கூட்டத்தார்.

தளர்ந்த வீரர்க்கு அரிதுகாண்
உண்மை தேடுநர் நோன்பிது;
வளர்ந்த வீரர்க்கும் அரிதுகாண்
விதவை நோன்பினும் அரிதுகாண்;
வீரர் வாகையோ சிலமணி
விதவை நோன்பவள் சாம்வரை
உண்மை தேடுவோர் வாழ்வினில்
போரும் ஒய்தல் இல்லையே!

---

* சாம்வரை - சாகும்வரை

## 84. ஜூடே தன் கௌ க்யா கர்பாவை

ஊனுடல் நிலையன்று அப்பா
உளந்தனில் செருக்கு வேண்டாம்
உனதுயிர் போன பின்பு
உடலையார் வைத்துக் காப்பார்?

பாயசம், நெய்யும் மற்றும்
பலகாரம் திணித்து வைத்த
பருவுடல் ஆவி போனால்
கொண்டுசென்று எரிப்பார் அன்றோ?

உருமாலை கட்டி வைத்து
உளமகிழ் வெய்த உந்தன்
தலையினைக் காகக் கூட்டம்
கொத்தியே தின்னும் அன்றோ?

எலும்புகள் வெந்து போகும்
அடுப்பினில் விறகு போல
புல்லென மயிரும் வேகும்
சொல்லுவான் கபீரன் தானே.

சாவெனும் தீயோர் கூட்டம்
தலையினில் அமரும் முன்னம்
மனிதனும் விழிப்ப தில்லை
விழிப்பதும் இல்லை தானே.

## 85. கஹைன் கபீர் விகார் கே

கபீரன் என்பவன் ஆய்ந்து சொல்கிறான்
சாதியும் நாடும் இல்லா ஒருவன்
குணங்களைக் கடந்தவன் உருவம் இல்லாதோன்
எங்கும் நிறைந்த பொருளாய் ஆவான்
மகிழ்ச்சிக் கூத்தினை நடைமுறை செய்தான்;
ஆக்கும் தொழிலைக் கடனாய்க் கொண்டான்
ஓமில் இருந்தே அனைத்தும் பிறந்தன
நிலவுல கே'அவன்' மகிழ்ச்சி ஆகும்
'அவனது' மகிழ்வே அழகிய வானம்
நித்தம் ஒளிதரும் சூரிய சந்திரர்
'அவனது' மகிழ்வே ஆகிடும் ஐயா;
'அவனது' மகிழ்வே முதல்இடை அந்தமும்
கடலும் அலையும் அவனது மகிழ்ச்சி
சரஸ்வதி யமுனை கங்கை ஆறுகள்
'அவனது' மகிழ்ச்சியின் காரணம் ஆகும்
'குரு' எனும் பெயரோன் ஒருவனே ஆவான்
ஒன்றிய பொருளும், ஒன்றாப் பொருளும்
'அவனது' மகிழ்வுக் கூத்தே ஆகும்
மண்ணும் விண்ணும் ஆகிய அந்தக்
கூத்தில் இருந்தே படைப்புகள் விரிந்தன.
உயிரினம் வாழும்அக் கூத்தின் உள்ளே
காசியில் வாழும் கபீரன் சொல்வான்
கூத்தினை இயற்றுவோன் மறைந்துள்ள போதும்
அகிலமே அடங்கும்அக் கூத்தின் உள்ளே.

---

'அவன்' 'குரு' ஆகிய சொற்கள் இறைவனைக்குறிக்கும்

## 86. மேரீ மேரீ கர்தா ஜனம் கயெள

'எனதெனது' என்று கழிந்தது வாழ்க்கை
கணமும் இராமெனச் சொல்லாமல் போனது
பிள்ளையாய்ப் போனது பன்னிரண்டு ஆண்டு
இருபது வரையும் தவம்செய்ய வில்லை
மூப்பான பின்னர் வருந்தத் தொடங்கினேன்.

கோபால் ராய்!

நீரில்லாக் குளத்துக்குக் கரைகட்ட நினைக்கிறாய்
பயிரினம் அழிந்தபின் நீர்பாய்ச்ச நினைக்கிறாய்
குதிரையை இழந்தபின் சேணத்தைக் காக்கிறாய்
தலையசைந்து ஆடும், கைகால் நடுங்கும்
கண்களில் ஊற்றாய் நீர்வழிந் தோடுமே
ஒருசொல் சொல்ல நா,இய லாதே
நற்கதி பெற்றிட நினைப்பாய் நீயெனில்
கபீர்சொல் கேளாய், அறிவு மிக்கோனே!
சேமித்த செல்வங்கள் உன்னுடன் வாரா
சாவெனும் அழைப்பு வந்தால்
அனைத்தையும் விட்டுநீ அகல வேண்டுமே.

## 87. ஜினி ஜினி பினி சடரியா

பாவும் ஊடையும் எதுவெனக் கேட்பின்,
ஆடையை நெய்திடத் தேவைப் பட்டிடும்
நூல்கள் எவையெனக் கேட்பீர் ஆகில்
இங்கலை பாவாம்; பிங்கலை ஊடை
ஆடை நெய்வதற்கு உதவும் நூல்கள்
'சுசாமன்' என்னும் பொருளது ஆகும்
எட்டாய் மலர்ந்த தாமரை மலர்கள்
பத்தாய் சுழன்று நூற்கும் சக்கரம்
மூலகம் ஐந்தும், மூன்று குணங்களும்
ஆடை ஆகிடும்; இதனை நெய்திடத்
தலைவன் பெற்ற மாதங்கள் பத்து
அடித்தும் இடித்தும் ஆடையை நெய்தான்
கடவுளர், மனிதர், முனிவர் அனைவரும்
ஆடையை அணிந்து அழுக்காய் ஆக்கினர்
காசியில் வாழும் கபீரன் மட்டும்
பக்குவ மாகஅவ் ஆடையை அணிந்து
அழுக்கு ஆகாமல் காத்தான் ஐயா.

## 88. கைசே தீன் கடி ஹை

அகண்ட வெளியில் இருந்து ஊற்றெழும்
சொல்லைப் பெற்றிடுவாய்
சொல்அது வேகுரு; அதனைக் கேட்டுச்
சீடன் ஆனேனே
அதனது பொருளை எத்தனைப் பேர்தான்
உணர்ந்திடு வார்ஐயா ?
சாது வே,நீ பன்முறை உரைப்பாய்
அந்தச் சொல்லினையே
வேத புராணச் சாத்திரம் அனைத்தும்
உரைக்கும் அச்சொல்லை.
அந்தச் சொல்லியே அந்தச் சொல்லும்
நிலைபெற் றதுஐயா
முனிவரும்; பக்தரும் அதனைப் பற்றி
உரைத்திடு வார்ஐயா
ஆனால் அச்சொல் மறைபொருள் தன்னை
யாரும் அறியவில்லை
இல்லற வாசி அச்சொல் கேட்டதும்
வீட்டைத் துறக்கின்றான்;
துறவியர் அச்சொல் கேட்ட பொழுதினில்
அன்பின் வழிவருவார்
ஆறு தத்துவம் கூறிடும் பொருளை
அறிந்திடு வாய்ஐயா.
துறந்திடும் ஆன்மா காட்டிடும் அச்சொல்
அச்சொல் லில்இருந்தே
உலகெனும் உருவமும் தோன்றி வந்தது;
அந்தச் சொல்லே
அனைத்தின் தோற்றம்; காசியில் வாழும்
கபீரன் சொல்வான்
அந்தச் சொல்லின் தோற்றம் தன்னை
யார்தான் அறிவாரே ?

## 89. கபீரா பிகர்யெள ராம் துஹாயீ

இராமனில் கலந்த கபீரும் ஏற்றான்
இராமனின் பேரருளை
மறவாய், மனிதா! பிறவிக் கடலில்
மூழ்கிப் போகாதே
சந்தன மரத்தின் அருகில் உள்ள
மரமும் மணம்பெறுமே
சிந்தா மணியைத் தழுவிய உடனே
இரும்பும் பொன்னாகும்
கங்கையில் கலக்கும் பலவகை ஆறுகள்
கங்கையின் நீராகும்.
காசியில் வாழும் கபீரன் நானும்
ஆய்ந்து சொல்லுகிறேன்
இராமனின் நாமம் பலமுறை சொல்பவன்
இராமனில் மூழ்கிடுவான்.

## 90. மன் ரே ஸன்ஸார் அந்த் குஹாரா

ஏ, மனமே !

உலக மேஒரு மாயத் தோற்றம்
தலைமேல் ஆடுது சாவின் ஆட்டம் °
இந்து மதத்தார் உருவை வணங்கித்
தம்மை யேநிதம் தாம்கொல் கின்றார்
துருக்கியர் 'அஜ்'எனும் யாத்திரை போவார்
நீள்முடி யோகியர் தாம்மாய்ந் திட்டார்
அவர்களும் அறியார் உந்தன் இருப்பிடம்
கவிநயம் தேடிக் கவிஞரும் மாய்ந்தார்
முனிவர் போவார் கேதார் பயணம்
தலைமுடி பறித்துச் சமணரும் மாய்ந்தார்
உன்மறை தோற்றம் யாரும் அறியார்
பொருள்பொதி வைத்து மன்னரும் மாய்ந்தார்
மண்ணில் புதைத்த பொன்னும் போகும்
வேதபா ராயணப் பண்டிதர் மாண்டார்
அழகினைப் பார்த்தே அழகியும் அழிந்தாள்
உடலைக் காண்பாய் கண்டறி வாயே
இராமனின் பேரிலா அனைத்தும் அழிந்தது
கபீரன் சொல்வான் அரியெனும் நாமம்
சொல்லாது போனால் நற்கதி உண்டோ ?

---

° சுருக்குக் கயிறு

## 91. ஜோ தீஸை தோ ஹை நாஹின்

நீயும் காண்பது 'அது'வல்ல
அப்பொரு ளுக்கோர் சொல்லில்லை

நீயும் காணா விட்டாலோ
நீயும் நம்ப மாட்டாயே

உனக்குச் சொல்லப் படுவதனை
நீயும் ஏற்க முடியாதே;

அறியா மையோர் இடைவெளியாம்.
பகுத்தறி யும்திறம் உடையோனே

அறிவான் சொல்லின் பொருளதனை;
சிலரே ஆய்வார் அருவத்தை.

மற்றோர் உருவைத் தியானிப்பார்;
ஆனால் விவேகம் உள்ளவரே

பிரம்மம், ஆன்மா வேறென்பார்
ஊனக் கண்ணின் பார்வைக்கு

அவனும் காணப் படமாட்டான்
அவனின் இனிய கீதத்தைக்

காதால் கேட்டிட முடியாதே
இன்பம் துன்பம் இரண்டினையும்

ஒன்றாய்க் காணும் ஒருவனுமே
சாவினை அடைவது இல்லைஐயா

காசியில் வாழும் சேணியனாம்
கபீரன் இதனைச் சொல்லுகிறான்.

## 92. காயா பௌரி சலத் ப்ரான் கஹே ரோயீ

உடல்விட்டு ஓடுது முழுமூச்சு என்று
உடலெனும் கூடே ஏன்நீ அழுவாய்?
பித்தம் பிடித்த உடலாம் கூடே!
உனக்கும் எனக்கும் தொடர்பில்லை இனியென
உடலைப் பார்த்து ஆன்மா கூறிடும்
கூற்றினைக் கேட்பாய் கேட்டிடு வாயே
உடலோடு இணைந்து இன்புற் றேனே
நித்தமும் உடலைத் தேய்த்துக் குளித்தேன்

ஆனால்'

உடலும் ஒருநாள் அழிந்து போகும்
யார்தான் அதனைக் சுாத்திடு வாரே?
நான்முகன், சனகர், சிவன்என் போரும்
ஆயிரம் நீள்முடி ஆதி சேடனும்
மூவுல கத்தில் பிறந்தவர் எல்லாம்
உடலோடு வந்தார் யார்தான் நிலைத்தார்?
பாவபுண் ணியங்களே வாழ்க்கைத் துணைவர்
மானிட னே!நீ அறிவாய் உண்மையை
கடவுளின் தன்மையை உலகினில் அறிந்தோர்
மிகச்சிலர் என்றே கபீர்சொல் வானே!

## 93. சர்க்கா கலை ஸீரத் விராஹின் கா

கணவனை விட்டுப் பிரிந்தவள் ஒருத்தி
இராட்டை தன்னில் நூல்நூற் கின்றாள்
உடலெனும் பேரூர் அழகாய்த் தோன்றும்
பேரூர் தன்னில் மனமெனும் மாளிகை
கட்டப் பட்டுக் காட்சி தந்திடும்
அன்புச் சக்கரம் விண்ணில் சுழலும்
விவேக மென்னும் மணிகள் பதித்த
ஆசனம் அங்கே உள்ளது ஐயா
மெல்லிய நூலினை அப்பெண் நூற்று
அன்பினால் வழிபாடு இயற்று கின்றாள்
நூலினைப் பதமாய்ச் செய்து தருகிறாள்
கபீரன் சொல்வான், 'இரவும் பகலும்
காவிய மாலையை நூற்கிறேன்; எந்தன்
தலைவன் வந்து பாதமாம் கமலம்
கொண்டெனைத் தீண்டிடும் பொழுது எந்தன்
கண்ணின் நீரே காணிக்கை ஆக்குவேன்!'

## 94. அல்லாஹ் ராம் ஜீவ் தேரை நாயீ

இராமனே! அல்லா எந்தன் வாழ்வோ
உங்கள் பெயரால்; உங்கள் பேரருள்
என்மேல் பொலிக மேன்மை யோரே !
தலையினை நிலத்தில் மோதுவ தாலும்
பெரும்பயன் யாதென நானும் அறியேன்
கொலையும் செய்து குற்றம் மறைப்பீர்
கண்ணிய வானாய் வாழ்ந்திட நினைப்பீர்
பலிஇடு வதனால் வரும்பயன் என்ன ?
தொழுகையில் முழந்தாள் இடுவதன் பயனெது ?
சூது நினைப்பில் 'நமாஸ்' மொழி வதிலே
'ஹஜ்' எனும் யாத்திரை யால்பயன் என்ன ?
பிராம்மணர் உண்ணார் ஏகா தசியில்
காஜிகள் உண்ணார் இரம்ஜான் நோன்பில்
ஐந்தாறு மாதம் வீணாய்க் கழிந்தபின்
ஒருமாதம் மட்டும் விரதம் எதற்கு ?
மசூதியில் மட்டும் கடவுள் வாழ்ந்தால்
மற்றுள்ள இடத்தில் வசிப்பவர் யாரோ ?
கடவுள் வாழிடம் கற்சிலை என்பார்
யாத்திரைத் தலங்களில் வாழ்கிறான் என்பார்
மோனப் பெருவெளி சூனியம் நிரப்பும்
ஞானப் பொருளைக் கண்டவர் சிலரே!
இந்துவின் இறைவன் வாழ்வது கிழக்கில்
முகம்மதின் அல்லா வாழ்வது மேற்கில்
வேறெங்குந் தேடும் செயல்களை விட்டுநீர்
தேடுவீர் இறைவனை இதயக் கோயிலில்
இராமனும் இரகீமும் வாழ்வது அங்கே
ஆடவர் பெண்டிர் என்றும் வாழ்வது
உங்கள் பிம்பம் அன்றோ ஐயா!
இரமனின் இரகீமின் மழலையே கபீரன்
கபீரின் குருவும் தலைவனும் 'அவனே!'

## 95. ஸம்ஸ்க்ரித் பாஷா பதி லிங்கா

சமஸ்கிருத மொழியை நான்கற் றறிந்ததால்
ஞானி நான்எனச் சொல்லிடச் சொல்லி
வேண்டி நிற்பதா அனைத்து மாந்தரை?
ஆனால் இதனால் பதன்தான் என்ன?
நாவொரு திக்கற் றவனாய் மிதக்க
தாகம் கொண்டுநான் அலைந்து திரிய,
பேராசைத் தீயால் பற்றிநான் எரிகையில்
அகந்தையும், பெருமையும் தலைமேல் சுமந்து
அலைந்து திரியும்உன் நோக்கம் வீணே!
கபீரன் சொல்வான் கேளாய் ஐயா
குப்பையில் அவற்றைப் போட்டு விட்டு
அன்பிற்கு உரியோன் அவனிடம் செல்வீர்
அவனே உங்கள் தலைவன் என்பீரே!

## 96. ஜீவ் மஹல் மேன் சீவ் பஹீன் லா

வாழ்வெனும் கோயிலில் வருகை புரிந்த
வாழ வைப்பவனைச் சேவை செய்வாய்
பாழாம் இரவும் கழிந்து சென்றிடும்
பைத்திய மாய்நீ நடந்திட வேண்டாம்
தனது இதயம் பறிகொடுத் தவனாம்
எந்தன் அன்பைப் பெறுவதற் காக
நானும் அவனைத் தரிசனம் செய்யப்
பல்லூழி காலம் காத்திருந் தேனே
இருப்பினும் அவனது பெரும்பே ரின்பம்
அருகில் இருப்பதை அறிந்திட இயலேன்
என்னுடை அன்பாம் கதவம் இன்னும்
திறந்திட வில்லை இயம்பு கின்றேன்
ஆயினும் என்னுடைக் காதில் ஒலித்திடும்
அருமபெரும் இசையின் இன்பப் பொருளை
அன்பிற் குரியோன் அறிந்திடச் செய்கிறான்
இன்றைய பொழுது இயம்பு கின்றேன்
நான்உய் வதற்கு நல்லெதிர் காலம்
இப்பொழு தென்னைத் தேடி வந்தது
கபீரன் சொல்வான் அறிவீர் அனைவரும்
நான் அடைந்திட்ட நல்லெதிர் காலம்
முடிவிலா இன்பப் பெருக்கே; அதனை
அடைந்தேன் ஐயா அறிவீர் நீரே.

## 97. ராம் மோஹீ தாரீ கஹா லெள ஜஇ ஹெள

எனக்கொரு நல்கதி அருளிய பிறகு
எனையெங்கு அழைத்துச் செல்வாய் இராமா ?
உனதரும் அன்பை வைகுந்தம் தருமோ ;
அவ்விடம் எதுவோ; அது! எங்கு உள்ளது ?

என்னைத் தொலைவில் அழைத்துச் செல்ல
விரும்பினும் முக்தியை எனக்குக் கூறு
அனைத்துப் பொருள்களில் நீயே இருக்கையில்
ஏனோ என்னை அலைய வைக்கிறாய்?

தெய்வீக ஞானம் எய்திடும் வரைக்கும்
வீடுபேறு எய்தும் பேச்சு இருந்திடும்
கபீரன் சொல்கிறான் ஒருவனே இராமன்
அனைத்துப் பொருளிலும், இதயத்தும் அவனே!

## 98. கர்ப் - வாஸ் மேல் குல் நஹின் ஜாதி

தாயின் கருவில் பிறந்திடு வோர்க்கு
சாதியும், மரபும் இல்லை ஐயா
தெய்விக சாரம் தன்னில் இருந்து
படைக்கப் பட்டார் மனிதர் அனைவரும்
பிராமணா னே, நீ கேளாய் ஐயா.
உயர்வும், புகழும் பிராமண னுக்கு
எப்போ திருந்து தோன்றி வந்தன?
நீயே உயர்ந்தவன் என்னும் மூட
நம்பிக் கையினால் வாழ்வைக் கெடுப்பாய்!
பிராம்மணப் பிறப்பே உண்மையில் உயர்ந்த
பிறப்பது என்றால், படைக்கும் ஆற்றலை
இயற்கை யன்னை உனக்குத் தராத
காரணம் என்ன? அறிவிப் பாயே!
நீயேன் பிராம்மணன்; நாங்களேன் சூத்திரர்?
தீட்டுப் பட்ட இரத்தம் போல்யாம்
கருதப் பட்டிடும் காரணம் என்ன?
பாலைப் போலத் தூய்மைஉள் ளோராய்
உமைநீர் நினைக்கக் காரணம் என்ன?
கபீரன் சொல்கிறான் நம்மவர்க் குள்ளே
பிராம்மணன் என்பவன் பிரம்மம் என்று
நினைக்கப் பட்டிடும் அவனே ஆவான்!

வேறு

தேடிநீ அலையும் பரம்பொருள் அறியக்
கற்றதும் உதவாதே
கபீரன் சொல்வான் 'அறிந்து விட்டேன்' என
அறிந்ததை அறிவித்தான்
அறிந்ததை நம்பாக் குருடர்க்கு அவனும்
வேறெது கூறிடுவான்?

## 99. சச்சா நாம் ஹை சப் சேன் ந்யாரத்

உண்மைப் பெயர்தான் வேறொரு பெயரைப்
போன்றதும் அல்லவே
கட்டுப் பாடும் கட்டுப் பாடிலா
இரண்டின் இடையிலே

இருப்பது ஒருசொல் கட்டுப் பாடுகள்
இலாதது விதையாம்
மலரும் கனியும் கட்டுப் பாட்டில்
அடங்கிடும் பொருளாகும்;

அறிவே கிளையாம் வேர்அவன் * நாமம்
வேர்எங்கு என்று
தேடுவீர் ஐயா; வேரை அடைந்தால்
மகிழ்ச்சி உள்ளது

வேரே உன்னைக் கிளையில் இலையில்
மலரில் கனியில்
சேர்க்கும் பொருளாம் அறிவாய் தலைவனுள்
இணையச் செய்வதும்,

பேரின்ப மென்னும் பலனைத் தருவதும்
கட்டுப் பாடும்
கட்டுப் பாடிலா பொருள்கள் அனைத்தின்
சாந்தியும் அதுவேயாம்.

---

* தன்னிகர் இல்லான்.

## 100. ஹம் ஸே ரஹா நா ஜாய்

அவன்தான் இசைக்கும் குழலின் மெல்லிசை
நான்கேட் கின்றேன்; ஆனால் அதனை
எந்தன் மனதில் நிரப்ப இயலவில்லை
வசந்த காலம் வாராப் போதும்
மலர்கள் மலரும்; தேனீக் கூட்டம்
அழைப்பைப் பெற்றது முன்ன தாகவே
வானம் அலையை, ஒளியை வீசிட
என்இத யத்தில் அலைஎழு கின்றது,
மழைபொழி கின்றது; எந்தன் இதயம்
தலைவனைத் தேடி ஏங்கு கின்றது
உலகின் தாள கதியும் எங்கே
தோன்றி மறையுமோ, அங்கே எந்தன்
இதயம் ஓடிச் சேர்ந்தது ஐயா
மறைக்கப் பட்ட கொடிகள் வானில்
சிறகை விரித்துப் பறக்கின் றனவே.
கபீரன் சொல்வான், 'வாழ்கின்ற போதே
இறக்கின்றது எந்தன் இதயம் தானே.'

## 101. மன் மோர் ரஹடா ரஸ்தா பிவுரியா

சுழலும் இராட்டை மனமாகும்
நாவே ஆடை ஆகிடுமாம்
அரியின் பெயரை நீயுரைத்தே
பெண்ணே 1 நூலை நூற்றிடுவாய்

இரண்டு கயிறுகளைக்2 கொண்டு
ஆப்புகள் நான்கினையும்3 இணைத்து
சககரம் எளிதாய்ச் சுழற்றிநான்
சிட்டம் செய்தேன் ஓர்ஆண்டாய்4

ஆறு மாதமே நூற்றதன்பின்
அரைகுறை வேலை செய்துவிட்டு5
அழகாய் நூலும் ஆனதென்று
மக்கள் அனைவரும் கூறுகிறார்

கபீரன் சொல்வான் உண்மையுடன்
நூலும் நன்றாய் ஆயிற்று
எனது இராட்டை எளிதன்று
பரம பதத்தைத் தந்திடுமே.

---

1 ஜீவாத்மா
2 இடகலை, பிங்கலை
3 மனம், புத்தி, சித்தம், அகங்காரம்
4 இதயத்தை தியானத்தில் ஆழ்த்துதல்
5 மனதைப் பக்குவம் செய்தல்

## 102. ஸைன் கே ஸங்கத் ஸாஸுர் ஆயீ ஹை

அன்புடை யோனுடன் அவன்இல் லத்தில்
வாழ்ந்திட வந்தேன்; ஆனால்

நான்அவ னுடனே வாழ்ந்திட வில்லை
அவனை நுகரவும் இல்லை

எந்தன் இளமை மறைந்து விட்டது
பாழாம் கனவினைப் போலே

எந்தன் திருமண நாளில் பெண்டிர்
ஒன்றாய்ச் சேர்ந்து பாடினரே

இன்பம், துன்பம் எனும்இரு தைலம்
என்னுடல் முழுதும் பூசினரே;

ஆனால் இந்தச் சடங்கென்று முடியும் ?
அன்பனை நீங்கிய பிறகு

தலைவ னுடன்எனைச் சேர்ந்திட முயன்ற
எந்தன் உறவினர் அந்தோ

நட்ட நடுவாம் பாதை வரையில்
விட்டுச் சென்று விட்டாரே

காசியில் வாழும் கபீரன் சொல்வான்,
'அன்பைத் துணையாய்க் கொண்டே

அன்பனின் இல்லம் அடைவேன் பிறகு
வெற்றி வாகையைச் சூடி

ஜெயபே ரிகையை இசைப்பேன் நன்றாய்
இதுதான் எந்தன் வழியே'

## 103. ஸுந்தா நஹி துன் கி கபர்

இயக்கப் படாத மணியின் இசையை
இன்னும் நீதான் கேட்கவில்லையோ?
அறையின் மையப் பகுதியில் மகிழ்ச்சிக்
கீதம் இனிதாய்க் கேட்கையிலே
அதையும் காதால் கேட்கா மல்நீ
வேறெதைத் தேடிச் செல்லுகிறாய்?
அன்பெனும் அமிழ்தினை நீபரு காவிடில்
உன்னுடன் ஒட்டிய மாசுகளைப்
போக்கிடும் ஆற்றல் வேறெதுவோ?
அன்பெனும் அமிழ்தம் பருகிடுவாய்
காஜியோ குரானின் பொருளைத் தேடிப்
பிறர்க்கும் அதையே கூறுகிறார்
அவரது இதயம் அன்பெனும் அமிழ்தில்
மூழ்காது இருக்கும் பொழுதினிலே
அவரும் மக்களின் குருவெனச் சொல்வதில்
விளைந்திடும் பயன்தான் ஏதையா?
யோகியோ தனது ஆடைகள் தம்மைக்
காவியில் தோய்த்து உடுக்கின்றார்;
ஆனால் அந்த அன்பின் நிறத்தை
அறிந்திட அவரால் ஆகிடுமோ?
காவி யூட்டிய ஆடையை அணிந்தும்
அதனால் விளையும் பயனென்ன?
கபீரன் சொல்வான், 'கோவிலுக் குள்ளோ,
திண்ணையிலோ நான்இருந் தாலும்
குடிசையி லேயோ பூங்கா வினிலோ
நான்இருந் தாலும் என்னுடைய
தலைவன் என்னுடன் ஒவ்வொரு நொடியும்
இருக்கின் றான்'எனச் சொல்வேனே.

## 104. பாய் கோய் ஸத்குரு சந்த் கஹாவை

அருவப் பொருளை ஊனக் கண்களால்
உருவாய்க் காட்டும் ஆற்றல் பெற்று,
சரியை கிரியை இவற்றை விட்டு
எளிய வழியில் இறைவனைக் காட்டி,
உன்னைக் கண்டால் கதவு அடைக்காது,
உலகைத் துறந்து வெறுத்தி டாது,
மூச்சினை அடக்கி வருந்தி டாமல்,
அனைத்துச் செயல்நீ செய்கின்றபோதே
மனதுடன் பொருந்திய பரம்பொருள் தன்னை
மனமெனும் கண்ணால் உனக்குக் காட்டி.
இம்மியும் நெஞ்சில் பயமில் லாது
பேரின் பத்தில் என்றும் மூழ்கி
அனைத்து மகிழ்ச்சியின் மையம் தன்னில்
ஆன்மா ஒன்றை வைப்பவன் எவனோ
அவனே உண்மைச் சாது என்போன்
எல்லை அற்றதோர் பொருளில் வாழும்
எல்லை அற்றது, எங்கும் உள்ளது
நீரில், நிலத்தில், வானில், காற்றில்,
நிலைத்த இடியின் முழக்கம் போலச்
சூனியம் கடந்து நிலைபெற் றிருக்கும்,
தேடிடும் ஒருவனின் இருப்பிடம் உள்ளது
உள்ளே இருப்பவன் வெளியிலும் உள்ளான்
நானும் அவனைக் கண்டு கொண்டேன்
அவனைக் கண்டவர் எனையன்றி யாரே ?

## 105. மேரி ஜிப்யா பிஸ்ணு நெஸன் நாராயிண்

திருமால்* வாழ்வது எந்தன் நாவில்;
நாரா யணன்என் கண்ணில் வாழ்வான்
இதயம் தன்னில் கோவிந்தன் இருப்பான்
இறுதிக் கணக்கைச் சாவு கேட்கையில்
'முகுந்தா' என்னும் முறையீடு செய்வேன்
நீயொரு பிராம்மணன்; காசியில் வாழும்
சேணியன் என்சொல் ஏற்றாய் இல்லை
மன்னரை, செல்வரைப் புகழ்ந்து பாடினாய்
என்மனம் பாடிடும் இராமனை மட்டுமே,
முன்பிறப்பு தன்னில் நானும்ஓர் பிராம்மணன்
என்செயல் அன்றைக்கு ஏற்குமாறு இல்லை
இராமனின் பாதம் பற்றாது விட்டதால்
ஆடையை நெய்திடும் சேணியன் ஆக்கினான்
நான்ஒரு பசுவாம்; பிராம்மண னே! கேள்
நீயொரு இடையன் பிறவியாம் புல்லை
மேலும் மேலும் மேய்ந்திடச் செய்வாய்
மேய்ந்திடும் தொழிலில் விடுதலை செய்யாய்
மந்தைகள் தமக்கு நீயோர் இடையனோ?
பிறவியாம் அலையுடைக் கடலிலே வீழ்ந்தேன்
ஒருவழி கண்டேன் கரையில் ஏறிட,
செய்வாய் 'இராம்'எனும் தெப்பம் தன்னை
சேணியன் கபீரின் அறிவுரை இதுவே.

---

* விஷ்ணு

## 106. பஹிலே பன் மை சுமிரெள ஸோஈ

தன்னேர் இல்லாத் தனிஒரு பொருளை
மனத்தினில் நினைத்திடு கின்றேன் முதலில்
இதுவரை யாரும் அவனது ஆழமும்,
ஆதியும், அந்தமும் அறிந்தவர் இல்லை
உருவம்உள் ளவனா இல்லையா அவனும்
பருமனா இலேசா யார்தான் அறிந்தார் ?
தாகமும், பசிக்கும் அப்பால் பட்டவன்
இருளுக்கும், ஒளிக்கும் அப்பால் பட்டவன்
விருப்பு வெறுப்பு எல்லையைக் கடந்தவன்
எதிலும், எங்கும், என்றும் இருப்பவன்
அவன்இயல் பானவன் முடிவற்ற பிரம்மம்
அறிவாம் அலைகளை எங்கும் தருபவன்
ஆழமாய் ஆய்ந்தபின் கபீரன் சொல்கிறான்
இராமெனும் பக்தியின் வேறெதும் இல்லையே.

## 107. ப்ரதம் ஏக் ஜோ ஆபை ஆப்

அவன்தான் இருந்தான் ஆரம் பத்தில்
அவனுக்கு அவனே நிகராய் ஆவான்
உருவமொன் றில்லா, நிறமொன் றில்லா
கட்டுப் பாடிலாப் பொருளாய் இருந்தான்
ஆதியும், நடுவும், அந்தமிஇல் லாமல்
ஆகி இருந்தான்; அன்று கண்ணும்,
இருளும், ஒளியும் இல்லாது இருந்தன.
அதன்பின் நிலமும், காற்றும், வானும்,
தீயும், நீரும், எதுவும் இல்லை;
கங்கையும், யமுனையும் போன்ற நதிகள்
கடலும், அலைகளும் அன்றைக்கு இல்லை,
குற்றம் குறைகள் அப்போது இல்லை
வேத சாத்திரப் புராணமும், குரானும்
மனத்துள் ஆய்ந்து கபீரன் சொல்கிறான்,

(வேறு)

'அறிய முடியா ஆழத்தில்
அவனது சுயமாம் தன்மையிலே
மேலோன் மறைந்து ஒன்றிவிட்டால்
செயல்கள் ஏதும் இல்லையையா.

(வேறு)

உண்பதும், குடிப்பதும், வாழ்வும், சாவும்
குருவுக்கு இல்லை, கோடாய், நிறமாய்
உருவாய், அருவாய் அவனும் இல்லை;
ஆடை உடுப்பது அவனுக்கு இல்லை;
சாதியும், சமயமும் அவனுக்கு இல்லை;
வேறெப் பொருளாய் அவனும் இல்லை
நாம தேயங்கள் அவனுக்கு இல்லை
நிறமும், நிறம்இலாத் தன்மையும் அவனைக்
கட்டுப் படுத்திக் காப்பதும் இல்லை
அவனுக் கென்றுஓர் இடமும் இல்லையே,

## 108. கலத் மன்ஸா அகல் தீன்ஹி

அலைந்து திரியும் எந்தன் மனதை
நிறுத்தி வைத்தேனே
நான்பார்த் தறிந்த நண்பன்* உதவியால்
நண்பனைக் காணுகிறேன்
எனக்கு நானே விடுதலை பெற்றேன்
சிறையில் இருந்துகொண்டே,

குறுகிய வழியெனும் சங்கிலி உடைத்தேன்
விடுதலைப் பெற்றுவிட்டேன்
கபீரன் சொல்வான், 'அடைய இயலாப்
பொருளை அடைந்தேன்
அன்பின் நிறத்தை எனது இதயம்
பெற்று விட்டதையா.'

* நண்பன்—குரு முழுமுதல் பொருள்.

## 109. வேத் கஹே ஸர்கன் கேஆகே

கட்டுப் பாடாத தனிப்பரம் பொருள்தான்
கட்டுப் பாடுகள் நிறைந்தஇவ் வுலகின்
வெளியே இருப்பதாய் வேதங்கள் கூறும்
அனைத்தின் வெளியே அவன்இருக் கின்றான்
அனைத்தின் உள்ளும் அவன்இருக் கின்றான்
பெண்ணே! உனக்குள் குழம்புவ தேனோ?
ஒவ்வொரு இடமும் நீவாழும் இடமே
அன்பின் நடுவில் கவலைகள் தோன்றா
பிரம்மம் என்பது இரவும் பகலாய்
வாழ்கின்ற இடமும் அதுவே ஆகும்
ஒளியே அவனது ஆடை ஆகும்
ஒளியே அவனது இருக்கை ஆகும்
அவ்வொளி உன்தலை மீதினில் உள்ளது
கபீரன் சொல்வான், 'உண்மைத் தலைவனே
என்றும் ஒளியாய் இருக்கின்றான் ஐயா.'

## 110. கௌன் மரை ஜன்மைன் ஆச

யார்தான் பிறப்பது; யார்தான் இறப்பது?
நரகமும் மோட்சமும் போவது யாரோ;
ஐந்துமூ லங்களை மாற்ற முடியுமோ?
அவைகளில் ஒருவன் கலந்து போவான்
ஐந்துமூ லங்கள் பிரிந்து போனால்
ஒருவன் மீண்டும் இணைவான் அவனுடன்
எல்லைக் கோடுகள் எங்குமே இல்லை
நீருக்குச் சாடியே ஆதாரம் ஆகிடும்
சாடிக்கு நீரே ஆதாரம் ஆகிடும்
உள்ளே இருப்பது நீராகும் அதற்கு
வெளியில் இருப்பதும் நீராகும் அன்றோ?
சாடி உடைந்தால் சாடியின் தண்ணீர்
வெளியில் நீருடன் கலந்திடும் ஐயா
அறிந்தோர் அறிவார் அரியஅப் பொருளை
ஆதியில், நடுவில், இறுதியில் இருப்பது
பரவெளி என்னும் பொருளே ஆகும்
காசியில் வாழும் கபீரன் சொல்வான்
எவ்வாறு ஒருவனைச் செயல்கள் பற்றிடும்?
பற்றிடும் என்னும் நம்பிக்கை பொய்யே.

## பயன் படுத்திய நூல்கள்

1. கபீர் கவிதைகள் மூன்று தொகுதிகள், க்ஷிதி மோகன்சென், (பிரம்மச்சார்ய ஆஸ்ரமம், போல்பூர். சாந்தினி கேதனா) 1910 - 11 (இந்தி)

2. கபீர், பரஸ்நாத் திவாரி. (நேசனல் புக் டிரஸ்ட் இந்தியா, புதுதில்லி) 1968 (இந்தி).

3. கபீர், பிரபாகர் மாச்வே (சாகித்ய அகாதமி புதுதில்லி) 1968 (இந்தி).

4. கபீர்தாசர் சரிதையும் கவிதையும், கோ. கிருஷ்ண மூர்த்தி (தினமணி காரியாலயம் சென்னை) 1956,

5. திருமூலர் திருமந்திரம்; முதலாம் தந்திரம்.

6. திருக்குறள்.

7. 'இராமனும் நீயே! இரகீமும் நீயே!' சேலம் அன்பரசு (திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம் 28-2-79 இல் ஒலிபரப்பிய நாடகத்தின் தட்டச்சுப்படி).

8. A History of The Sikhs vol I by Kushwanth Singh (oxford University Press New Delhi) 1978

9. Sri Rama to Sri Rama Krishna by K. G. warthy (Sri Ramakrishna Math Madras) 1977

10. Poems of Kabir Introduction by Rabindranath Tagore (London Macmillan & Co., Ltd., Madras) 1962

11. History of The Sikhs by J. D. Cunningham (S. Chand & Co., Ltd., New Delhi) 1981

12. The Sikhs, Their Religious Belief and Practices by wowen cole Pia Singh Sambi (Vicas Publishing House Pvt Ltd., New Delhi) 1978

13. கலைக்களஞ்சியம் மூன்றாம் தொகுதி (கலைக் களஞ்சிய அலுவலகம் சென்னை) 1956 (தமிழ்)

14. இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் தொதிகள் 1, 2, 3 அப்துல் ஹ—றகீம் (யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ் & புக் செல்லர்ஸ் சென்னை) 1976 (தமிழ்)

15. இந்தி ஸாஹித்ய கோஷ் Dr. தீரேந்திர வர்மா குழுவினர் (பனாரஸ் ஞானமண்டல் லிமிடெட், வாரணாசி) ஸ்ரீக்ருஷ்ண ஜன்மாஸ்டமி ஸம்வத் 2017 (இந்தி)

16. ஸ்ரீ மகாபக்த விஜயம், குகப்ரியை (தி லிட்டில் ப்ளவர் கம்பெனி, சென்னை-17) 1958

17. கழகத் தமிழ் அகராதி, கழகப் புலவர் குழுவினர் (திருநெல்வேலித் தென்னிந்திய நூற்பதிப்புக்கழகம் லிமிடெட், சென்னை-1) 1969

## பாட்டு முதல் குறிப்பு



சேலம் அன்பரசு பிறப்பு 1942
புலவர் எம்ஏ எம்லிட் பட்டங்கள்
இதழியல் பட்டயம்
கல்வெட்டு ஆய்வுப் பயிற்சி பெற்றவர்
ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்வதில்
திறமையுள்ளவர் கவிஞர் பேச்சாளர்
வானொலி நாடகங்கள்
சிறுகதைகள் பேட்டி மற்றும் தொல்லியல்
ஆய்வுக்கட்டுரைகள் நூறுக்கும் மேல்
வெளிவந்துள்ளன
அதிகமான் பெருவழி 27 ஆவது காதம்
மைல்கல் கண்டறிந்து
வெளியிட்டவர்களில் ஒருவர்

∴


**விஜயம் பதிப்பகம்**

30, சென்னகிருஷ்ணன் தெரு சேலம் 636 002